# பெண்கள்

# ருதுஜனன ஜாதகம்

சிறுமண்ணூர்

முனிசாமி முதலியாரவர்கள்

இயற்றியது



C. MUNISWAMY MUDALIAR & SONS.

THE

SOUTH INDIAN BOOK DEPOT,

2/17, CORAL MERCHANT ST., MADRAS.

 **1931** [*Price As. 4*





உயிரெழுத்து

# மூலிகை மர்மம் 4 பாகங்கள் ரூபா 3

1. மூலிகை மர்மம் முதலாம் பாகத்தில் பிரம சிருஷ்டியால் உலகத்திலுண்டா யிருக்கும் 600-வித மூலிகைகளின் தலையெழுத்துக்களை அ-ஆ-இ-ஈ-உ-ஊ-எ-ஏ-ஐ-ஒ-ஓ ஆகிய உயிரெழுத்துகளின் வரிசைக் கிரமம்போல் பிரித்து ஒவ்வொரு மூலிகையால் நிவர்த்தியாகக் கூடிய வியாதிகளையும் வியாதிகளுக்கு இன்னின்ன விதமாய் உபயோகிக்க வேண்டுமென்ற செய்முறைகளையும் ஆயுர்வேத விதிப்படி அச்சிட்டிருக்கின்றது.

2. இரண்டாம் பாகத்தில் அளவிறந்த ரோக பாகங்களை அங்கன்னியாச விதிப்படிச் சிரரோகம், நேத்திரரோகம், தந்தரோகம், நாசிரோகம், செவிரோகம், கண்டமாலை, அறையாப்பு, பிரமியம், மூலம், பவுத்திரம், நீரடைப்பு, நீர்க்கட்டு, தாருட்டிய விருத்தி முதலான ரோக பாகங்களைப் பாதாதிகேசம் வரையில் அங்கம் பிரித்துக் கைபாகம் செய்பாகத்தோடு அச்சிட்டிருக்கின்றது.

3. மூன்றாவது பாகத்தில் அஷ்டகர்ம மென்னும் வசிய மூலிகை, மோகன மூலிகை, தம்பன மூலிகை, உச்சாடன மூலிகை, (எட்டெட்டு) 64-மூலிகைகளும் இன்னின்ன பாகத்திற் குபயோகமாகு மென்பதையும் அவைகளை யெடுப்பதற்கு அதர்வண வேதப்படிக் காலம் வாரம் ஹோரர்பூசை மந்திரம் இவற்றுடன் அநேக ரோக சாந்தி மூலிகையும் செய்பாகமும் அச்சிட்டிருக்கின்றது.

4. நான்காம் பாகத்தில் பெண்பாலுக்குரிய வியாதிக் கூட்டங்களை அங்கத்தில் பிரித்து, பிள்ளையில்லாதவர்க்கு, பாலில்லாதவர்க்கு, பால் அதிகப்பட்டவர்களுக்கு, ருதுவில்லாதவர்க்கு, மாத முழுக்கில்லாதவர்க்கு, சூதகக்கட்டுக்கு, பெரும்பாட்டுக்கு, ஜன்னிகளுக்கு இன்னும் அநேக வியாதிகளுக்கு, இம்மாதிரி ரோகபாகங்களைப் பிரித்து, இன்னும் அநேக அரிய பெரிய மூலிகைகளின் உபயோகங்களைக் கைபாகம் செய்பாகத்துடன் அச்சிட்டிருக்கின்றது. தபாற் கூலி அணா 8



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பெண்கள் ருது ஜனன ஜாதகம்

நடராஜப்பத்து முதலிய ஸ்தோத்திர நூல்களையும், மூலிகை மர்மம், கனக சாஸ்திரம், விஷ வைத்திய சிந்தாமணி, சுகந்த பரிமள சாஸ்திரம் முதலிய வைத்திய நூல்களையும், நவகண்டஆரூடம், நஷ்டஜாதக கணிதம் முதலிய சோதிட நூல்களையும், நவக்கிரக மகாமந்திரம், மலையாள மாந்திரீகபோதினி முதலிய மந்திர நூல்களையும், நாரதர் கலகம், பிரபஞ்ச உற்பத்தி முதலிய சரித்திர நூல்களையும் இயற்றிய ஆசிரியரும்

ஆயுர்வேத வைத்தியருமான

**சிறுமணவூர் முனிசாமி முதலியார்**

இயற்றியது



சி. முனிசாமி முதலியார் அண்டு ஸன்ஸ்.

தென்னிந்திய புத்தக சாலை,
2-17, பவழக்காரத் தெரு, சென்னை.

 1931 [விலை அணா 4

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பெண்கள் ருது ஜனன ஜாதகம்

## கடவுள் வணக்கம்

சீர்பூத்த செழுங்கமலத் தயன்மால் வானோர்
சித்தர்முனி வோர்மறையோ ரெல்லா மிந்நாள்
நீர்பூத்த கயிலைவரைக் கடவுள் கூற
நிலவியசோ திடக்கடலைக் கடைந்து கும்பப்
பேர்பூத்த முனிவர்க்கும் நவநா டிக்குட்
பேசியபெண் ருதுவியல்பைப் புகல முக்கண்
கார்பூத்த வொருகோட்டுக் களிற்றுச் செய்ய
கமலமுடி புனைந்துவினை கழித்து வாழ்வாம்.

---

## நவக்கிரக ஸ்துதி

இரவி சங்கர னீஸ்வரி திங்கள்சே
யினிய கந்த னிசைதரு மால்புதன்
குருவ யன்சுரர் கோன்வெள்ளி சுன்னெமன்
குலவி ராகு குறிப்பத்ர காளியாம்
மருவு சித்திரா புத்திரன் கேதுவாம்
வான வர்முனி வோரிராசி மற்றுநா
ளரிமு தற்கிர கத்தாற் பரசிவ
னண்ட பிண்டம் படைத்தளித் தாற்றுமே.



(இ-ள்.) உருத்திரன் சூரியனாகவும், உருத்திரி சந்திரனாகவும், முருகக்கடவுள் அங்காரகனாகவும், திருமால் புதனாகவும், பிரமன் குருவாகவும், இந்திரன் சுக்கிரனாகவும், எமன் சனியனாகவும், காளி இராகுவாகவும், சித்திராபுத்திரன் கேதுவாகவும், தேவர்கள் ருஷிகள் முதலியோர் இராசி, நக்ஷத்திர முதலியவைகளாகவும் படைத்து அண்ட பிண்ட சராசரங்களையும் பஞ்சக் கிருத்தியத்தால் நடாத்து கின்ற பரசிவக் கடவுள் யாதோ அதனைச் சிந்திப்பாம்.

| | | | |
|---|---|---|---|
| மீனம்<br>சவ | மேஷம்<br>சவ | ரிஷபம்<br>சது | மிதுனம்<br>ருவ |
| கும்பம்<br>சது | இராசிச் சக்கரம் | | கடகம்<br>ரு௨ |
| மகரம்<br>ருவ | | | சிங்கம்<br>ருவ |
| தனுசு<br>ரு௨ | விருச்சிக<br>ருவ | துலாம்<br>ரு | கன்னி<br>ரு |

## கிரகங்களின்

### நட்பு, ஆட்சி, உச்சம், பகை, நீசம், முதலியன அறிதல்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மேஷத்திற்கு | சூரியன் | உச்சம் | மகரத்திற்கு | சந்திரன் | சமம் |
| இடபத்திற்கு | ,, | பகை | கும்பத்திற்கு | ,, | சமம் |
| மிதுனத்திற்கு | ,, | சமம் | மீனத்திற்கு | ,, | சமம் |
| கடகத்திற்கு | ,, | நட்பு | மேஷத்திற்கு | அங்கார | ஆட்சி |
| சிங்கத்திற்கு | ,, | ஆட்சி | இடபத்திற்கு | ,, | சமம் |
| கன்னிக்கு | ,, | சமம் | மிதுனத்திற்கு | ,, | பகை |
| துலாத்திற்கு | ,, | நீசம் | கடகத்திற்கு | ,, | நீசம் |
| விருச்சிகத்திற்கு | ,, | நட்பு | சிங்கத்திற்கு | ,, | நட்பு |
| தனுசிற்கு | ,, | நட்பு | கன்னிக்கு | ,, | பகை |
| மகரத்திற்கு | ,, | பகை | துலாத்திற்கு | ,, | சமம் |
| கும்பத்திற்கு | ,, | பகை | விருச்சிகத்திற்கு | ,, | ஆட்சி |
| மீனத்திற்கு | ,, | நட்பு | தனுசிற்கு | ,, | நட்பு |
| மேஷத்திற்கு | சந்திரன் | சமம் | மகரத்திற்கு | ,, | உச்சம் |
| இடபத்திற்கு | ,, | உச்சம் | கும்பத்திற்கு | ,, | சமம் |
| மிதுனத்திற்கு | ,, | நட்பு | மீனத்திற்கு | ,, | நட்பு |
| கடகத்திற்கு | ,, | ஆட்சி | மேஷத்திற்கு | புதன் | சமம் |
| சிங்கத்திற்கு | ,, | நட்பு | இடபத்திற்கு | ,, | நட்பு |
| கன்னிக்கு | ,, | நட்பு | மிதுனத்திற்கு | ,, | ஆட்சி |
| துலாத்திற்கு | ,, | சமம் | கடகத்திற்கு | ,, | பகை |
| விருச்சிகத்திற்கு | ,, | நீசம் | சிங்கத்திற்கு | ,, | நட்பு |
| தனுசிற்கு | ,, | சமம் | கன்னிக்கு | ,, | உச்சம் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| துலாத்திற்கு | புதன் | நட்பு | கடகத்திற்கு | சனி | பகை |
| விருச்சிகத்திற்கு | ,, | சமம் | சிங்கத்திற்கு | ,, | பகை |
| தனுசிற்கு | ,, | சமம் | கன்னிக்கு | ,, | நட்பு |
| மகரத்திற்கு | ,, | சமம் | துலாத்திற்கு | ,, | உச்சம் |
| கும்பத்திற்கு | ,, | சமம் | விருச்சிகத்திற்கு | ,, | பகை |
| மீனத்திற்கு | ,, | நீசம் | தனுசிற்கு | ,, | சமம் |
| மேஷத்திற்கு | விழயாம் | நட்பு | மகரத்திற்கு | ,, | ஆட்சி |
| இடபத்திற்கு | ,, | பகை | கும்பத்திற்கு | ,, | ஆட்சி |
| மிதுனத்திற்கு | ,, | பகை | மீனத்திற்கு | ,, | சமம் |
| கடகத்திற்கு | ,, | உச்சம் | மேஷத்திற்கு | இராகு | பகை |
| சிங்கத்திற்கு | ,, | நட்பு | இடபத்திற்கு | ,, | நீசம் |
| கன்னிக்கு | ,, | பகை | மிதுனத்திற்கு | ,, | நட்பு |
| துலாத்திற்கு | ,, | பகை | கடகத்திற்கு | ,, | பகை |
| விருச்சிகத்திற்கு | ,, | நட்பு | சிங்கத்திற்கு | ,, | பகை |
| தனுசிற்கு | ,, | ஆட்சி | கன்னிக்கு | ,, | நட்பு |
| மகரத்திற்கு | ,, | நீசம் | துலாத்திற்கு | ,, | நட்பு |
| கும்பத்திற்கு | ,, | சமம் | விருச்சிகத்திற்கு | ,, | உச்சம் |
| மீனத்திற்கு | ,, | ஆட்சி | தனுசிற்கு | ,, | நட்பு |
| மேஷத்திற்கு | சுக்கிரன் | சமம் | மகரத்திற்கு | ,, | நட்பு |
| இடபத்திற்கு | ,, | ஆட்சி | கும்பத்திற்கு | ,, | பகை |
| மிதுனத்திற்கு | ,, | நட்பு | மீனத்திற்கு | ,, | நட்பு |
| கடகத்திற்கு | ,, | பகை | மேஷத்திற்குக் | கேது | பகை |
| சிங்கத்திற்கு | ,, | பகை | இடபத்திற்கு | ,, | நீசம் |
| கன்னிக்கு | ,, | நீசம் | மிதுனத்திற்கு | ,, | நட்பு |
| துலாத்திற்கு | ,, | ஆட்சி | கடகத்திற்கு | ,, | பகை |
| விருச்சிகத்திற்கு | ,, | சமம் | சிங்கத்திற்கு | ,, | பகை |
| தனுசுக்கு | ,, | சமம் | கன்னிக்கு | ,, | நட்பு |
| மகரத்திற்கு | ,, | நட்பு | துலாத்திற்கு | ,, | நட்பு |
| கும்பத்திற்கு | ,, | நட்பு | விருச்சிகத்திற்கு | ,, | உச்சம் |
| மீனத்திற்கு | ,, | உச்சம் | தனுசிற்கு | ,, | நட்பு |
| மேஷத்திற்குச் | சனி | நீசம் | மகரத்திற்கு | ,, | நட்பு |
| இடபத்திற்கு | ,, | நட்பு | கும்பத்திற்கு | ,, | பகை |
| மிதுனத்திற்கு | ,, | நட்பு | மீனத்திற்கு | ,, | நட்பு |

# ஜனன பலாபலன்

ஸ்திரீகள் ஜனன காலத்து உதய விராசியையும் சந்திரன் நின்ற இராசியையும் ஸ்புடம் செய்து கிரகங்களின் வலிவறிந்து பலன்கூற வேண்டுமென வறிக.

ஜனன காலத்து லக்கினத்தில் சந்திரன்நிற்பினும் அல்லது 7-ஆம் இடத்திருந்து பார்க்கினும் ஜாதகி தேஜசுடையவளாமென வறிக.

ஜன்ம லக்கினமும் சந்திர லக்கினமும் இரட்டைராசியாக விருக்கில் ஜாதகி வடிவுடையவளென வறிக.

இவ்விரண்டு ராசியையும் சுபக்கிரகங்கள் பார்க்கத் திருமாதுக்கு நிகருற்றவளாயும் மகத்தாகிய பூஷணங்களணிந்தவளாயும் வாழ்வாளென வறிக.

ஜன்ம லக்கினமும் சந்திர லக்கினமும் ஒற்றை ராசியாகில் நல்ல சொரூபமுடையவளாம். இவ்விரண்டு ராசியையும் சுபக்கிரங்கள் பார்க்கில் சுக சொரூபியாக வாழ்வாள்.

ஜன்ம லக்கினத்திலும் சந்திர லக்கினத்திலும் பாபக்கிரகங்கள் கலந்து நிற்பினும் அல்லது பார்க்கினும் பிறந்தவள் பாப கன்னி யாவாளென வறிக.

ஜன்ம லக்கினத்தில் சந்திரன், சுக்கிரன் இவர்கள் நிற்க மணம் புரிந்து சுகியாக வாழ்வாளென வறிக.

ஜன்ம லக்கினத்தில் சந்திரனும் புதனும் கூடிநிற்க ஜாதகியானவள் பலகலையு முணர்ந்து நீதி யுடையவளாய் வாழ்வாளென்று உணர்க.

ஜன்ம லக்கினத்தில் புதனும் சுக்கிரனுங் கூடியிருக்க ஜாதகி ஞான மார்க்கங்களை யாவர்களுக்கும் உபதேசித்து வாழ்ந்திருப்பாளென் றறிக.

ஜன்ம லக்கினத்திற்கு 3-5-ஆம் இடத்தில் சுபக்கிரகங்கள் நிற்க அவள் மிகுந்த தான தர்ம தயவுள்ளவளும் நற்குணத்தோடு சுகமுடன் வாழ்பவளு மாவாளெனவறிக.

உதய ராசிக்கு 8-ஆ மிடத்தில் பாபக் கிரகங்களிருக்க விதவை யாவாளென வறிக.

8-ஆ மிடத் ததிபன் அங்கிசாதிபதி அஷ்டவர்க்கத்தில் எத்தனையாம் வருடம் சேர்வனோ அத்தனையாம் வருடத்தில் விதவை யாவாளென வறிக.

உதய ராசிக்கு 2-ஆ மிடத்தில் சுபக்கிரகங்கள் நிற்க 8-ல் பாபர் நின்றால் கணவனுக்கு முன்னாக மரணமடைவாள்.

ரிஷபம், கன்னி, விருச்சிகம் இம்மூன்று இராசிகளில் மதி நிற்க ஜாதகிக்குப் புத்திரர் அற்பமாமென வறிக.

சனி பலவானாக விருக்க கணக்கன் மதி பிருகு இவர்கள் மூவரும் ஈன ராசியிலிருக்க, அது ஒற்றை ராசியாக ஜன்மமாகவும் மற்றக் கிரகங்கள் ஒற்றை ராசியில் அன்புடன் இருக்க சனி ஒற்றை ராசியாக இருக்க அவள் புருடனிடம் ஆசாரமுந் தெய்வ பக்தியுமுடையவள்.

உதய ராசிக்கு ஏழாமிடத்தில் தீக்கோள் நிற்க 9-ஆ மிடத்தில் சுபக்கிரகங்கள் நிற்கச் சந்நியாசிப் பெண்ணாகத் திரிவாளென வறிக.

இரட்டை ராசியில் சூரிய சந்திர னிவர்கள் கூடியிருந்தால் வருத்தமொடு பலதொழில் புரிந்து ஜீவிப்பாள். சூரியன் செவ்வாய் கூடி நிற்கில் முழு பாவியாகவிருப்பாள்.

உதயராசியிலும் ஸ்திரவிராசியிலும் ஏழாமிடத்திலும் எத்தனைக் கோள்கள் சேர்ந்திருக்கின்றனவோ அத்தனைப் புதல்வ ருண்டாகும். ஜன்மத்தில் அரவு நிற்க, மூன்று மிடத்தி லெத்தனைக் கிரகங்கள் நிற்கின்றனவோ அத்தனைப் புதல்வருண்டாமென வறிக.

உதயராசிக்கு 3-5-7-ஆ மிடத் ததிபருடனே சனி கூடி நிற்கப் பிறந்த குழவிக்கு அற்ப வயதாமென வறிக.

உதய ராசிக்கு 9-ஆ மிராசியாதிபதிகள் 6-8-ஆ மிடங்களில் நிற்க சூத்திர ஜாதிக்கென வறிக. வியஸ்தானத்தில் நிற்கப் பிறந்த சேய் விப்பாரற்கென வறிக.

9-ஆ மிடத் ததிபனோடு சூரியன் கூடி நிற்கினும், அல்லது வியஸ்தானத்திலும், 8-ஆ மிடத்திலும், 6-ஆ மிடத்திலும் பற்றிநின்ற கோள்களுடன் இரவி கூடி நிற்கப் பிறந்தவள் விதவை யாவாளென வறிக.

ஒன்பதுக் குடையோன் நற்கோளின் வீட்டி லிருந் தால் அவள் மத்திம வயதில் விதவை யாவாளென வறிக.

9-ஆ மதிபதி உச்சமாகிப் பாவனுமாகில் அவள் தீர்க் காயுளோடு சுமங்கலியாக வாழ்வாளென வறிக.

ஜன்மாதிபதியும் 9-ஆ மிடத் ததிபனும் மாறி மாறி யிருந்தால் ஜனித்தபெண் உடனே மரித்துப்போய்விடுவா ளென வறிக.

உதய ராசிக்கு 8-ஆ மிடத்தில் சந்திரனிருக்க அவள் அமங்கலியாகத் திரிவாளென வறிக.

அங்காரகனுக்கு ஆட்சியாகிய இரண்டுமனையும், ஜன்ம ராசியாக அதில் சந்திரனிருக்க அங்காரகன் திரிதியகங்கிச மேறி சனிபாவர் மனையிலுற ஜனித்தவள், புதல்வரில்லாத வளாய் அடிமைப்படுவாளென வறிக

குரு திரிம்சாங்கிசத்தில் ஜனித்தவள் பதிவிரதை யாவாள். குளிகன் புதல்வன் இவர்கள் அங்கிசமாகில் ஆசா ரமுள்ளவ ளாவாளென வறிக.

சுக்கிரனுக்கு ஆட்சியாகிய இரண்டு இராசியும், ஜன்ம விராசியாக அதில் இந்து நிற்க அங்காரகன் அங்கிசமாக ஜனித்தவள் கொடியவளாக விருப்பாள். சனி அங்கிசமா னால் கணவனைவிட்டு நீங்கி, சஞ்சலத்தோடு வேறொருவனுக் குப் பாரியையாவாளென வறிக.

குரு அங்கிசமாகில் தாட்சண்ணிய முள்ளவளாக விருப்பாள். புதன் அங்கிசமாகில் நால்வகை ஞான உபதே சங்களையு முணர்வாள். சுக்கிரன் அங்கிசமாகில் தன் சொல்லை யாவரும் புகழும்படி பூமியில் வாழ்ந்திருப்பாள்.

புதனுடைய ஆட்சி உச்சமாகிய இரண்டு இராசியும், ஜன்ம விராசியாகிய அதில் சந்திரனிருக்க அங்காரகன் அங்கிசத்தில் ஜனித்தவள் இனிய தொழில்களைப் புரிவாள்; சனி அங்கிசமாகில் அலியாக விருப்பாள்; குரு அங்கிசமாகில் நாற்றிசைக்கும் இனியவளாக விருப்பாள்; புத னங்கிசமாகில் ஞானியாக விருப்பாள்; சுக்கிரன் அங்கிசமாகில் நற்குணமுடையவளாக விருப்பாளென வறிக.

கடகம் ஜன்ம லக்கினமாக சந்திரன் அதிலிருக்க, செவ்வாய் அங்கிசமாக வரின் பலருடன் சேர்பவளுமாவாள்.

கடகம் ஜன்ம லக்கினமாக அதில் சந்திர னிருக்க, தனி அங்கிசமாகில் அவள் கணவனைக் கொல்வதற்கு எந்நேரமும் எண்ணமுடையவளா யிருப்பாளென வறிக.

கடகம் ஜன்ம லக்கினமாக அதுல் சந்திர னிருக்க, புதன் அங்கிசத்தில் ஜனித்தவள் சிற்பத்தொழில் புரிகுவாள்.

கடகம் ஜன்ம லக்கினமாக அதில் சந்திரனிருக்க குருவின் அங்கிசமாயின் அவள் நற்குணவதியாமென வறிக.

கடகம் ஜன்ம லக்கினமாக அதில் சந்திரனிருக்க சுக்கிரன் அங்கிசமாயின் அதில் ஜனித்தவள் மிகவும் சாதுவாக விருப்பாளென வறிக.

இவ்வடைவாக அங்கிசப் பலாபலனை யாவரும் எளிதில் காணும்பொருட்டு முன்னோர் கூறியிருக்கின்றனர்.

சிங்கவிருஷபம் ஜன்ம லக்கினமாய் அதில் சந்திரனிருக்க அது அங்காரகனங்கிசையானால் அநாசாரமுடையவளாவாள். சனி சுக்கிரன் இவர்கள் அங்கிசத்தில் ஜனித்தவள் சோர புருஷனைச் சேர்ந்து அதனால் அயலிடமேகிக் கணவனை விட்டுத் தனியாக விருப்பாள். குரு வங்கிசமானல் அரச மகிஷியும், புதன் அங்கிசமாகில் சரீர வருத்தமுமாய் ஒருவருக்குப் பணிவிடை செய்தும் அபவிர்த்தியடைந்தும் பரிதவிப்பாளென வறிக.

தனுசு மீனம் இலக்கினமாக அதில் சந்திர னிருக்க செவ்வாய் குரு இவர்கள் திரிம்சாங்கிசமானால் நற்குணவதி யாக விருப்பாள். சுக்கிரன் அங்கிசமானால் ரோக புருஷனை மணம்புரிவாள். சனி யங்கிசமானால் வெகு காமியும் புதன் அங்கிசமாகில் ஞானியாகவும் சுப காரியம் செய் பவளுமாமெென வறிக.

சனியுடைய ஆட்சியாகிய இரண்டு ராசியும் ஜன்ம லக் கினமா யதில் சந்திரனிருக்க அங்காரகன் அங்கிசமாகின், தாதியாய் அல்லற்படுவாள், சனி யங்கிசமாகில் தனக்குத் தாழ்ந்தவனை மணப்பாள், குருவின் அங்கிசமாகில் பதி விரதையாக இருப்பாள், சந்திரன் அங்கிசமாகில் மலடியா வள், சுக்கிரன் அங்கிசமாகில் மலடியாவள், புதன் அங்கிச மாகில் எப்போதும் சுகமுடன் கணவனோடு கலந்து சந் துஷ்டியாய் வாழ்ந்திருப்பாளென வறிக.

உதய இராசிக்கு 7-ஆ மிடத்தில் சனி புதன் நிற்க குருவுக்கு 7-ம் வீடு சரவிராசியானால் அவள் கணவன் எந் நாளும் தேச சஞ்சாரியாவன்; ஸ்திர ராசியானால் தான் வாழும் ஊரைவிட்டு அகலாமல் இருப்பான், உபய ராசி யானால் சிலநாள் ஊரிலும் சிலநாள் அயலூரிலுந் திரிவான். சந்திரன் 7-ஆ மிடத்திலிருக்க அவரைப் பாபர்கள் பார்க்க அவள்மேல் கணவன் ஆசைப்படாமல் இகழ்வான்.

உதய விராசிக்கு 7-ஆ மிடத்தில் அங்காரகன் சூரியன் இவர்கள் கூடினும் அல்லது வேறெந்த இடத்தில் கூடி யிருந்தாலும் வாலிபத்திற்றனே அமங்கலியாவா ளென வறிக. சனியோடு கூடி நிற்க அவர்களைத் தீக்கோள் பார்க்க வாலிபத்தில் நரையுண்டாமென வறிக.

பாவக் கிரகங்கள் பலனற்று ஏழாமிடத்தி லிருக்க அவர்களைச் சுபர் பார்த்தால் அவள் கணவன் வேண்டா மென வோட்டி விடுவாள். அன்றியும் அங்காரகனும் சுக்கிர னும் தங்களுடைய அங்கிசத்தி லிருக்கவும் அல்லது இவர் கள் மாறுக இருக்கவும் அவ்வீடு ஏழாகவு மிருக்க அவள் தன் புருடனைவிட்டு வேறொருவனை விரும்பிப்போய்விடுவள்.

ஏழில் சனி அங்காரகன் சந்திரன் இவர்கள் கூடி யிருந்தால் சோரம் போவாள்.

சனி அங்காரகர்களின் வீடே லக்கினமாய் அது அங்காரக னங்கிசமாக ஜன்மத்தில் சந்திரனும் சுக்கிரனு மிருந்து அவர்களைப் பாவிகள் பார்க்க நின்றிருந்தால் மலடியாவதுமன்றி அவளும் அவள் தாயும் பலரை நேசிப் பவர்கள் ஆவார்கள்.

ஜனன லக்கினத்திற்கு ஏழில் அங்காரகனும் சனியும் கூடியிருந்தால் அவள் கால்நோயால் வருந்துவாள். நல் லோர்கள் அங்கிசமானால் நன்றும், இடை தொடைகள் அழகுள்ளவளா யிருப்பாள்.

சந்திரனுஞ் சுக்கிரனுங் கூடி யிலக்கினத்தி லிருக்க ஜாதகியானவள் சுகமுடன் வாழ்ந்திருப்பாளென வறிக.

சந்திரனும் புதனும் ஜன்மத்திலிருக்க ஜாதகியான வள் வித்வத்தனமை யுள்ளவ ளாவாளென வறிக.

புதனுஞ் சுக்கிரனும் ஜன்மத்தி லிருக்க ஜாதகியான வள் கொண்டவனுக்குப் பிரியமுள்ளவளாக விருப்பாள்.

சுபர்கள் மூன்றுபேரும் உதய விராசி முதற்கொண்டு நின்றிருக்க ஜனித்த ஜாதகி தனவதியாய் அழகும் சுபமு முள்ளவளாக வாழ்ந்திருப்பாளென வறிக.

ஜனன லக்கினத்துக்கு ஏழாம்வீடு சனி வீடானல் புருஷன் கிழவனும் நற்குணமில்லாதவனு மாவான்.

சந்திரனும் சுக்கிரனும் ஜனன லக்கினத்திற்கு ஏழி லிருந்தால் கிழப் புருடனுக்கு வாழ்க்கைப் படுவாள்.

8-ஆ மிடத்தில் பாபக் கிரகங்கள் நிற்க ஜாதகியான வள் விதவை யாவாளென வறிக.

8-ஆ மிடத்தில் பாபக்கிரகமிருந்து இரண்டில் சுபக் கிரக மிருந்தால் ஜாதகியானவள் சுமங்கலியாக மரணமடை வாளென வறிக.

---

## ருதுவாகும் மாதப் பலன்

சித்திரையில் புருஷனுக் காகாதப்பா
சுகமடைவாள் வைகாசி மாதமானால்
புத்திரசம்பத்தா யிருப்பாள் ஆனிமாதம்
புருஷரெல்லா மிச்சிப்பாள் ஆடிமாதம்
சித்திரம்போல் பிள்ளைகளை மிகவேபெற்று
சிறப்படைவா ளாவணியில் ருதுவேயானால்
பத்தியுடன் விர்த்தியுண்டாம் புரட்டாதிக்கு
பதிவிரதை யாயிருப்பாள் பரீக்ஷைபாரே.

(இ-ள்) சித்திரை மாதத்தில் ருதுவானால் புருஷனுக்கு ஆகாது. வைகாசியாகில் சுகமாக விருப்பாள். ஆனி மாத மாகில் புத்திர சம்பத்துடனிருப்பாள். ஆடிமாதமாகில் பல புருஷரை இச்சிப்பாள். ஆவணி மாதமாகில் நல்ல குழந்தை களைப் பெறுவாள். புரட்டாசி மாதமாகில் விருத்தியோடு பத்தியுள்ளவளும் பதிவிரதையு மாவாள்.

பாரப்பா வைப்பசியில் ருதுவேயானால்
பிள்ளைகளை யீன்றெடுத்து விதவையாவாள்
பாரதனில் கார்த்திகையில் ருதுவேயானால்
பலரையுமே தூஷிப்பாள் கோபியாவாள்
வாரஞ்சேர் மார்கழியில் ருதுவேயானால்
மக்களுண்டு மனதுநோகாள்
சிறப்புற்ற தைமாதம் ருதுவேயானால்
சிறுமையில்லை புண்யவதி பெருமைகொள்வாள்.

(இ-ள்) ஐப்பசி மாதம் ருதுவானால் பிள்ளைகளைப் பெற்றுப் பின் விதவையாவாள். கார்த்திகை மாதத்தில் பலரையுந் தூஷிப்பது மல்லாமல் கோபியுமாவாள். மார் கழிமாதத்தில் நல்ல சுந்தரமான குழந்தைகளைப் பெற்றுப் பொருளுடன் சுகித்திருப்பாள். தை மாதமானால் புண்ணிய குணமுந் தரும சிந்தையு முடையவளா யிருப்பாள்.

பெருமையுண்டு திரவியமுங் குறைவிராது
பாக்கியவதி யாயிருப்பாள் மாசிமாதம்
அருமையாம் பங்குனியில் ருதுவேயானல்
ஆயுளுண்டு மக்களுண்டு மகிழ்ச்சியுண்டு
மறைபொருளா யிருந்திட்ட விந்தநூல்தான்
மண்டலத்தி லனைவோரும் அறியவென்றே
சிறுமணலூர் முனுசாமி முயன்றளிக்கச்
சித்திரம்போல் நேர்விழியாய்க் காணலாமே.

(இ-ள்) மாசி மாதம் ருதுவானல் நல்ல செல்வமுடையவளாய்ச் சந்தோஷித்திருப்பாள். பங்குனி மாதமானல் ஆயுளும் புத்திர சந்துஷ்டியும் குடும்ப விருத்தியுமுடையவளா யிருப்பாள்.

---

## வாரப் பலா பலன்

ஆமப்பா ஞாயிறென்ற கிழமையானல்
ஐயையோ வியாதியினல் மெலிந்துபோவாள்
ஆமப்பா திங்களிலே ருதுவேயானல்
அருந்ததி போலிருப்பாள் கற்பைக்காப்பாள்.
ஆமப்பா செவ்வாயில் துக்கமுண்டு
அதிக சுகங் கிடையாது விதவையாவாள்
ஆமப்பா புதன்கிழமை பிள்ளையுண்டு
பொருளுண்டு புத்தியுண்டு புகழுண்டாமே.

(இ-ள்.) ஞாயிற்றுக்கிழமையில் ருதுவானல் அதிக வியாதியையும் நலியையும் தரும். திங்கட்கிழமையில் ருதுவானல் அருந்ததிக்கு நிகரான பதிவிரதா தருமத்தையும். செவ்வாய்க்கிழமையில் ருதுவானல் உஷ்ண வியாதியும் பீடையுமடைந்து சுகமில்லாமல் விதவையாவாள். புதன் கிழமையில் ருதுவானல் புததிரர்களைப்பெறுவாள். பொன்னும் புத்தியும் உடையவளா யிருப்பாள்.

வியாழமென்ற கிழமையிலே ருதுவேயானால்
விளம்பினூர் பாக்கியவதி யென்றேசொல்லு
தாழ்வில்லை வெள்ளியென்ற கிழமையானல்
தன் புருஷன் மனம்போலப் பணிகள்செய்வாள்
பாழான சனிக்கிழமை ஆகாதையோ
படமுடியாத் துன்பமாம் தரித்திரியாவாள்
ஏழான வாரபலன் இதுவே யாகும்
இடப்பலனைச் சொல்லுகிறே மேந்திக்கொள்ளே.

(இ-ள்.) வியாழக்கிழமையில் ருதுவானல் பாக்கிய வதியாகவிருப்பாள். வெள்ளிக்கிழமையாகில் பார்யாபத்தி யுண்டாகி அவள் புருஷன் மனம்போலே ஆபரணங்கள் செய்துகொடுப்பான். சனிக்கிழமையிலாகில் ஆகாது. துன் பம் அதிகரித்துத் தரித்திரியாகி விபத்தை யடைவாள்.

---

## திதியின் பலாபலன்

பிரதமையாகில் சோரமும் கன்னிப்பருவமு முடையவளா
துவிதியையாகில் அழகுமிகுந்தவள் ஆவாள் [யிருப்பாள்
திரிதியையாகில் இன்பமுடையவளாவாள்
சதுர்த்தியாகில் சத்துருவுடையவளாவாள்
பஞ்சமியாகில் புத்திரரைப் பெறுபவளாவாள்.
சஷ்டியாகில் ஆசாரமுடையவள் ஆவள்
சப்தமியாகில் புத்திரபாக்கியமுண்டா யிருப்பாள்
அஷ்டமியாகில் புத்திரரைப்பெற் றிழப்பள்
நவமியாகில் கிலேசமாக விருப்பாள்
தசமியாகில் தருமஞ் செய்வாள்
ஏகாதசியாகில் துக்கமுடையவள் ஆவாள்
துவாதசியாகில் பலமுடையவள் ஆவாள்
திரயோதசியாகில் கோபி, தற்புகழ்ச்சி யுடையவள்
சதுர்த்தசியாகில் சோரம் பாபஞ் செய்பவளா யிருப்பாள்
பௌர்ணமியாகில் இடருடையவள் ஆவாள்
அமாவாசையாகில் தரித்திரியாக விருப்பாள்.

## நக்ஷத்திர பலாபலன்

### விருத்தம்

உத்திராட மாதியாக வாறுமாறு முத்தமம்
பித்தனார் பிறந்தநாளொ டேழுநாட்கள் மத்திமம்
அத்தமோடு சித்திரை யகன்றவாழ்வு குன்றிடும்
மற்றைமூ விரண்டுநாளு மங்கை நூலிழப்பளே.

அசுவனிக்கு விதவையாவாள்
பரணிக்குப் புத்திரவதியாவாள்
கார்த்திகைக்கு மலடியாவாள்
உரோகிணிக்கு நன்மையுடையவளாவள்
மிருகசீரிடத்திற்குப் புருஷனுக்கினியவள்
திருவாதிரைக்குப் புருஷனில் வெறுப்புடையவள்
புனர்ப்பூசத்திற்குச் சீருடையவள்
ஆயிலியத்திற்கு வயிறழிவுள்ளவள்
மகத்திற்குப் பர்த்தாவுக்கு நல்லவள்
பூரத்திற்கு மலடியாவள்
உத்திரத்திற்குப் பிரயோசனவதியா யிருப்பள்
அஸ்தத்திற்கு பந்துக்களை ரக்ஷிப்பாள், நல்லவள்
சித்திரைக்கு அறிவுள்ளவளா யிருப்பாள்
சோதிக்கு வெகு புத்திருடைய்வ ளாவாள்
விசாகத்திற்கு அமங்கலையாவாள்
அநுடத்திற்கு ரோகியாக விருப்பாள்
கேட்டைக்குப் பரஸ்திரீயா யிருப்பாள்
மூலத்திற்குப் பாலுடையவளாக விருப்பாள்
பூராடத்திற்கு அடிமையாவாள்
உத்திராடத்திற்குத் தர்மிஷ்டியா யிருப்பாள்
திருவோணத்திற்குப் பாக்கியவதியாக விருப்பாள்
அவிட்டத்திற்குப் பொருளுடையவளாக விருப்பாள்
சதயத்திற்குப் பொருளழிவு உடையவளாவாள்
பூரட்டாதிக்கு மலடியாவாள்
உத்திரட்டாதிக்குத் தரித்திரி யாவாள்
ரேவதிக்கு ரோகியாக விருப்பாள்

## யோக பலாபலன்

விஷ்கம்பமாகில் விசனமுண்டா யிருப்பாள்
பிரீதியாகில் சந்தோஷமுண்டா யிருப்பாள்
ஆயுஷ்மானாகில் தீர்க்காயுளா யிருப்பாள்
சௌபாக்கியமாகில் சம்பத்துண்டா யிருப்பாள்
சோபானமாகில் சுமங்கலியாக விருப்பாள்
அதிகண்டமாகில் பாவியாக விருப்பாள்
சுகர்மமாகில் சுகமாக விருப்பாள்
திருதியாகில் தைரியமாக விருப்பாள்
சூலமாகில் துர்மரணமுண்டாம்
கண்டமாகில் பாவியா யிருப்பாள்
விருத்தியாகில் நன்மையுண்டா யிருப்பாள்
துருவமாகில் பதிவிரதையா யிருப்பாள்
வியாபாதமாகில் விதவையாவாள்
ஹர்ஷணமாகில் யோகியா யிருப்பாள்
வச்சிரமாகில் நல்ல ரூபவதியா யிருப்பாள்
சித்தியாகில் சகல சம்பத்துண்டா யிருப்பாள்
வியதிபாதமாகில் கொடிய விசனமா யிருப்பாள்
வரியானாகில் தர்மசிந்தனையா யிருப்பாள்
பரிகமாகில் உறவினர்க்குப் பகையா யிருப்பாள்
சிவமாகில் நல்லவளா யிருப்பாள்
சித்தமாகில் திரவியமுண்டா யிருப்பாள்
சாத்தியமாகில் போகவதியா யிருப்பாள்
சுபமாகில் சந்தோஷமா யிருப்பாள்
சுப்பிரமமாகில் கீர்த்தி யுண்டா யிருப்பாள்
பிராம்யமாகில் பாவியா யிருப்பாள்
மாகேந்திரமாகில் இந்திர யோகமாக விருப்பாள்
வைதிருதியாகில் உயிர்வதை செய்வாள்

---

## கரண பலாபலன்

பவம் சுகமா யிருப்பாள்
பாலவம் சௌபாக்கியவதியா யிருப்பாள்

தைதிலம் பட்சமுண்டாயிருப்பாள்
கரம் விதவையாவாள்
வணிஜம் கொள்ளக்கொடுக்க வல்லவள்
பத்ரம் நன்மையா யிருப்பாள்
சகுனி நடவாத நடக்கை நடப்பாள்
சதுஷ்பாதம் சந்தோஷ மில்லாதவள்
நாகம் நன்மை யில்லாதவள்
கிமஸ்துக்கினம் தரித்திரமாக விருப்பாள்.

---

## ருதுவான இடத்தைக் கொண்டு இலக்கினத்தைத் தெரிந்துகொள்ளல்

குடியிருக்கும் வீட்டிற்குள் ருதுவேயானால்
கூறலா மேடலக் கினமேயென்று
இடமான பசுத்தொழுவந் தன்னிலானால்
எழுதலா மிடபலக் கினமென்றுந்தான்
வடிவழகி நிர்வாணமாயிருக்கும் போது
வடிவுகண்டால் மிதுனலக் கினமதாகுந்
தடமென்ற நீர்க்கரையில் ருதுவானாலே
தடையின்றிக் கடகலக் கினமென்போமே.

(இ-ள்) குடியிருக்கும் வீட்டில் ருதுவாகில் மேஷ லக்கினமாம், பசுத் தொழுவமாகில் ரிஷப லக்கினமாம், நிர்வாணமாக விருக்கும்போதாகில் மிதுன லக்கினமாம், நீர்க்கரையாகில் கடக லக்கினமாம்.

செப்புவாம் வீட்டிற்கு வெளியேயாகில்
சிறப்புடனே வன்மைமிகு சிங்கலக்கினமெனவே
தப்பாது பூவனத்திற் றேப்பிலானால்
தையலவள் கன்னியென்ற லக்கினமே
அப்புசூழ் கிராமத்தின் மத்தியானால்
அறையலாந் துலாலக்கின மென்றேதான்
மெய்ப்புற அயல்வீட்டில் ருதுவானாலே
விருச்சிக லக்கினமென் றியம்பலாமே.

(இ-ள்) வீட்டிற்கு வெளியில் ருதுவானால் தனுசு லக்கினமாம். வனத்தின் மத்தியிலாகில் கன்னியா லக்கினமாம். கிராம மத்தியிலாகில் துலா லக்கினமாம். அயல் வீட்டிலாகில் விருச்சிக லக்கினமாம்.

தன்மைசேர் மொழியுடையாள் தன்வீட்டில் ருதுவானால்
தனுசென்ற லக்கினமாம் வேறுமுண்டோ
பெண்ணவள் தான் கிணற்றருகே ருதுவேயானால்
பேசலா மகரலக் கினமென்றேதான்
எண்ணில்சீ ராறுகுளங் கரையிலானால்
ஏதமிலா லக்னமது கும்பமாகும்
பண்பிலாள் பாக்யமிலாள் நீராடும்போது
பகருவர் மீனலக்கின மென்றேமேலோர்.

(இ-ள்) தன்னுடைய வீட்டில் ருதுவாகில் தனுசு லக்கினமாம். கிணற்றருகிலாகுல் மகர லக்கினமாகும். ஆறு குளக்கரையிலாகில் கும்ப லக்கினமாம். ஸ்நானஞ் செய்து கொண் டிருக்கும்போதாகில் மீன லக்கினமாம்.

## இலக்கின பலாபலன்

மேட லக்கினமாகில் பர ஸ்திரீ, ரிஷபமாகில் விபசாரி, மிதுனமாகில் விபசாரி, கடகமாகில் ஒழுக்கமில்லாதவள், சிங்கமாகில் நெறி யுடையவள், கன்னியாகில் பதிவிரதை, துலாமாகில் தரித்திரி, பாட்டாளி, விருச்சிகமாகில் பரஸ்திரீ, தனுசாகில் விபசாரி, மகரமாகில் கற்புடையவள், கும்பமாகில் திரவியமுண்டு, மீனமாகில் தீதுடையவளாம்.

## ஸ்தான பலாபலன்

வீட்டிற்கு வெளியாகில் விபசாரி, பசுத் தொழுவமாகில் பதிவிரதை, நிர்வாணமாகில் கிலேசம், தண்ணீர்க் கரையிலாகில் ஆயுளுண்டாம், வன மத்தியிலாகில் சம்பத்துண்டு, கிராம மத்தியிலாகில் விபசாரி, அயல் வீடாகில் கெட்ட நடத்தை யுடையவள், வீட்டிற்குள்ளாகில் ஒழுக்க

முள்ளமள், கோயிலிடமாகில் மிகவுஞ் சாமர்த்திய முள்ளவள், ஸ்திரீகளுக்கு மத்தியிலாகில் தகப்பனை யிழப்பாள், படுக்கையிலாகில் துக்கியாவள், நிற்கையிலாகில் நன்றாய் வாழ்வாள், புசிக்கையிலாகில் வெகு நன்மை யுண்டு, குதிரைமேலாகில் வெகு திரவிய முண்டு, கொல்லையிலாகில் கொஞ்சம் வாழ்வு என்று கூறுவர் மேலோர்.

## ஏழாமிடப் பலாபலன்

சூரியன் 7-ஆமிட மிருக்கில் விதவை
சந்திரன் 7-ஆமிட மிருக்கில் குழந்தைகள் சம்பத்து
செவ்வாயாகில் வேசையாவாள்
புதனாகில் மலடியாவள்
வியாழனாகில் பாக்கியமில்லாதவள்
சுக்கிரனாகில் வீடு விட்டுப் போவாள்
சனியாகில் வியாதியா யிருப்பாள்
இராகுவாகில் ஜாரத்துவம் செய்வாள்
கேதுவாகில் உறவுக்குப் பகையாயிருப்பாள்

## ருதுவான நக்ஷத்திரத்தில் நவக் கிரகங்கள் நிற்கில் அவைகளின் பலாபலன்

சூரிய னிருக்கில் புருஷன் மரிப்பான்
சந்திர னிருக்கில் சூலியா யிருப்பாள்
செவ்வா யிருக்கில் இறந்து போவாள்
புத னிருக்கில் மலடாவாள்
குரு விருக்கில் நோன்புடையவள்
சுக்கிர னிருக்கில் மலடியாவாள்
சனியிருக்கில் வேசையாவாள்
இராகு விருக்கில் விபசாரியாவள்
கேது விருக்கில் துறவியாவள்

## உத்தம பலாபலன்

சுபக் கிரகங்களுடைய அஷ்ட வர்க்கங்களிலே ருதுவானாலும் ருதுவான லக்கினத்திற்குக் கேந்திரம் திரி

கோணம் 2-ஆ மிடம் 11-ஆ மிடம் இவைகளில் சுபக் கிர கங்களிருந்தாலும் 6-ஆ மிடம் பாபக்கிரகங்க ளிருந்தாலும் உத்தமமெனப்படு மென்பதாம்

## அதம பலாபலன்

கிரகண காலத்தில் சங்கராந்தியில் பாபக் கிரகத்தில் திரியஸ்தமிறுதியில் 7ஆமிடம் பாபக்கிரக மிருக்கும்போது குரு நக்ஷத்திரங்களில் சூரியன் சரக்கிரக லக்கினத்தில் புருஷனுக்குச் சந்திராஷ்டமான காலத்தில் ஸ்திரீ ருதுவா னால் தோஷமெனப்படும்.

---

## ருதுவானபோது யார் பார்க்கிறார்களோ அந்தத் தரிசனப் பலன்

தானே தான் கண்டாலுந் துக்கமாகும்
தன் புருஷன் கண்டாலுந் துக்கமாகும்
தேனுக்கு மொழியுடைய கன்னியர்கள் கண்டால்
தெய்வபக்தி மிக்குடைய புண்ணியவதியாம்
வானுக்குங் கைம்பெண்கள் கண்டாரானல்
வாழ்வற்று மாங்கலிய மிழந்து போவாள்
தானெழுகு மெண்ணெயிட்ட தலையர்கண்டால்
தையலவள் தரித்திரமே யநுபவிப்பாள்
மானுக்கு வேசிகண்டால் போகமாகும்
மாண்பிலா பிணியர் கண்டால் ரோகமாகும்.

(இ-ள்) ருதுவாகுங் காலத்தில் தானே பார்ப்பாளா னால் துக்கமுண்டு, தன் புருஷன் காணிலும் துக்கமேயா கும், கன்னிகாஸ்திரீகள் காணில் தெய்வபக்தியோடு புண் ணியவதியாவாள், கைம்பெண்கள் காணில் விதவையா வாள், எண்ணெய்த் தலையர் கண்டால் தரித்திர மநுபவிப் பாள், வேசியர் காணில் போக பாக்கியமாக விருப்பாள், வியாதியஸ்தர் காணில் நோய்ப்படுவாளென வறிக. தாசி பொத்த வெள்ளாட்டி காண்பாளாகில் தரித்திர மநுபவிப்

பாள். மாங்கலிய ஸ்திரீகள் கண்டால் குறைவில்லாமல் சுமங்கலியாக வாழ்வாள். நீச்ச ஸ்திரீ புருஷர் காணில் ஜாதி விட்டு நீங்குவாள்.

## நாழிகை பலாபலன்

10-நாழிகைக் குள்ளாகில் உத்தமம்
20-நாழிகைக் குள்ளாகில் மத்திமம்
30-நாழிகைக் குள்ளாகில் அதமம்

## ருது கால பலன்

பிராதக் காலமானால் சுபம், முற்பகலானால் தீர்த்த யாத்திரை, மத்தியானமானால் புத்திர சம்பத்துண்டு, பிற்பகலானால் சோரத்துவம், சாயங்காலமானால் அநேக பதிகள், அஸ்தமனமானால் வேசியாவாள், முன்னிரவு தீர்க்காயுள், நடு ராத்திரியானால் விதவையாவாள், பின் ராத்திரியானால் சுகமில்லாதவள், காலை மாலை சந்திகளிலானால் வேசிகளின் குணங்களென்றறிக. சந்தியா காலத்தில் ருதுவானவள் எப்போதும் தூர்ப்பாக்கிய முள்ளவள்.

## ஸ்தனக் குறிப்பு

சாயுங்காலமானால் குவிந்ததுபோ லிருக்கும்
அர்த்தராத்திரியானால் இரண்டுஞ் சுருங்கிப்போம்

## ஜாமப் பலாபலன்

1-வது ஜாமமாகில் சுபகரமா யிருப்பாள்
2-வது ஜாமமாகில் திரவியமுண்டா யிருப்பாள்
3-வது ஜாமமாகில் மாங்கலியமுண்டு
4-வது ஜாமமாகில் பலரையும் வேண்டுவாள்.

## ஜாம ஸ்தனக் குறிப்பு

1-வது ஜாமமாகில் திரண்ட கொங்கையுண்டு
2-வது ஜாமமாகில் திரண்ட கொங்கையுண்டு
3-வது ஜாமமாகில் சாய்ந்த கொங்கையுண்டு
4-வது ஜாமமாகில் சரிந்த கொங்கையுணடு

## ருது ஸ்திரீ வஸ்திரக் குறிப்பு

நகைத்தால் சிவப்புப் புடவையென வறியவும்
கோபமானால் வெள்ளைப் புடவையென வறியவும்
நாணமானால் கறுப்புப் புடவையென் வறியவும்.

## மேற்படி விந்து பலாபலன்

வட்டமாகில் பொருள் சேரும், சதுரமாகில் சத்துரு நாசம், பிறைபோலாகில் ஆயுள் குன்றும், நீண்டிருந்தால் மரணம், வண்டுபோலிருந்தால் திரவியமுண்டு, செண்டு போலிருந்தால் பிள்ளைக ளுண்டாமென வறிக.

## தோஷ பலாபலன்

1-வது நாழிகையாகில் புருஷனுக்காகாது
2-வது நாழிகையாகில் திரவிய நாசம்
3-வது நாழிகையாகில் சகலமும் நாசமாம்
4-வது நாழிகையாகில் தரித்திரியா யிருப்பாள்.

## நக்ஷத்திர பலன்

அசுவனி, ரோகிணி, மிருகசீரிடம், பூசம், உத்திரம், அஸ்தம், சித்திரை, சுவாதி, விசாகம், அனுடம், மூலம், திருவோணம், அவிட்டம், சதையம், உத்திரட்டாதி, ரேவதி, இந்தப் பதினாறு நக்ஷத்திரங்களும் உத்தம மெனப் படும். மகம், திருவாதிரை, கிருத்திகை, கேட்டை, புனர் பூசம் இவ்வைந்து நக்ஷத்திரங்களும் மத்திம மெனப்படும். மற்ற ஆறு நக்ஷத்திரங்களும் அதம மெனப்படும்.

## நக்ஷத்திரப்பாத பலாபலன்

பெண்கள் புருட நட்சத்திரத்தில் ருதுவானாலும், கார்த்திகை, திருவாதிரை, புனர்பூசம், மகம், கேட்டை இந்த நக்ஷத்திரப் பாதம் 4-க்குள் 1-வது பாதத்தில் ருதுவானாலும் சுபம். 3-வது பாதத்தில் 25-பேருக்கு அன் னங்கொடுத்துப் பரிகாரஞ் செய்யவும். 4-வது பாதத்தி லானால் ஓம சாந்தி செய்யவும்.

பரணி, பூசம், பூராடம், பூரட்டாதி, ஆயிலியம் இந்த நக்ஷத்திரபாதம் 4-க்குள் 1-வது பாதத்தில் ஸ்திரீ ருதுவானால் விதவையாவள், 2-வது பாதமாகில் புத்திர ஹானி, 3-வது பாதமாகில் நலமிராது, 4-வது பாதமாகில் சுபமில்லை. இதற்கு 7-நாளைக்கு மேல் சடங்கு செய்யவும்.

## ருதுவான நிஷேதகால அளவு

பரணியிலாகில் 10-மாதங்கள் விலக்கப்படும்
பூராடமாகில் 8-மாதங்கள் விலக்கப்படும்
மகமாகில் 12-மாதங்கள் விலக்கப்படும்
திருவாதிரையாகில் 6-மாதங்கள் விலக்கப்படும்
பூரமாகில் 6-மாதங்கள் விலக்கப்படும்

ஆயிலியம்
கார்த்திகை } 4-மாதங்கள் விலக்கப்படும்
கேட்டை

உத்திரம் 5-மாதங்கள் விலக்கப்படும்.

இங்ஙனம் குறித்தபடி அந்தந்த நக்ஷத்திரங்களுக்குக் கண்டிருக்கும் மாதங்கள் சென்ற பிறகு ஸ்திரீயைப் புருஷர் பார்த்தால் யாதொரு தோஷமுமில்லை யென்பதாம். சாந்திமுகூர்த்தத்துக்குப் பிரயத்தனஞ் செய்ய உத்தமம்.

## ஆரூட பலாபலன்

கிழக்குத் திக்கிலாகில் செல்வமுண்டா யிருப்பாள்
தென்கிழக்கிலாகில் மலடியாக விருப்பாள்
தெற்கி லாகில் நன்மை யடைவாள்
தென்மேற்கி லாகில் பிச்சை யெடுப்பாள்
மேற்கிலாகில் யோகியாவாள்
வடமேற்கிலாகில் விதவை யாவாள்
வடக்கி லாகில் ரூபவதி யாவாள்
வடகிழக்கிலாகில் வேசை யாவாள்



## ருதுவானவள் கட்டியிருந்த சேலையைப் பார்த்து இன்ன திசையில் ஆனுளென்று அறிதல்

தான் வாசஞ் செய்யுமிடத்திற்கு,

கிழக்கு ஆனுல் கிழிந்த புடவை யுடையவள்
தென்கிழக்கு ஆனுல் பச்சைப் புடவை யுடையவள்
தெற்கு ஆனுல் சிவப்புப் புடவை யுடையவள்
தென்மேற்கு ஆனுல் வெள்ளைப் புடவை யுடையவள்
மேற்கு ஆனுல் அழுக்குப் புடவை யுடையவள்
வடமேற்கு ஆனுல் கறுப்புப் புடவை யுடையவள்
வடக்கு ஆனுல் பஞ்சவர்ணப் புடவை யுடையவள்.

### மேற்படி பலாபலன்

கிழிந்த புடவையானுல் கலகம், பச்சைப் புடவை யானுல் தரித்திரம், சிவப்புப் புடவையானுல் வியாதி, வெள்ளைப் புடவையானுல் சந்தானம், அழுக்குப் புடவையானுல் நன்மை, கறுப்புப் புடவையானுல் விபசாரம், பஞ்சவர்ணப் புடவையானுல் தரித்திரம், சரிகை மஞ்சள் புடவையானுல் சுகமெனப்படும்.

### பிந்தாரூடம்

கிழக்கு 3-துளி கண்டிருக்கும்
தென்கிழக்கு 6-துளி கண்டிருக்கும்
தெற்கு 4-துளி கண்டிருக்கும்
தென்மேற்கு 2-துளி கண்டிருக்கும்
மேற்கு 4-துளி கண்டிருக்கும்
வடமேற்கு 3-துளி கண்டிருக்கும்
வடக்கு 1-துளி கண்டிருக்கும்
வடகிழக்கு 4-துளி கண்டிருக்கும்

### மேற்படி பலாபலன்

ஒற்றையானுல் ஆண்குழந்தைகளெனப்படும்
இரட்டையானுல் பெண்குழந்தைகளெனப்படும்

## புத்திரர்களாரூடம்

| | | |
|---|---|---|
| கிழக்குத் திக்கிலாகில் | புத்திரர்கள் | 2 |
| தென்கிழக்கிலாகில் | ,, | 1 |
| தெற்கிலாகில் | ,, | 8 |
| தென்மேற்கிலாகில் | ,, | 4 |
| மேற்கிலாகில் | ,, | 6 |
| வடமேற்கிலாகில் | ,, | 2 |
| வடக்கிலாகில் | ,, | 9 |
| வடகிழக்கிலாகில் | ,, | 10 |

### மேற்படி பலாபலன்

ஒற்றையானால் சம்பத்துண்டாம்
இரட்டையானால் ரோகமுண்டாம்

## ருது பிரஸ்னை பலாபலன்

பிரஸ்னை கேட்க வந்தபோது எத்தனை நாழிகையோ அத்தனை நாழிகையில் 3 தள்ளி மற்றவையோடு அன்றைய திதி வாரஞ் சேர்த்துக் கணக்கிட்டு அதைப் பன்னிரண்டில் கழித்த சேஷம் 3, 5, 6, 8, 11 ஆக வரின் சுசிவதி யெனப்படும். 1, 2, 4, 9, 10 - ஆக வரின் அசுசிவதி யெனப்படு மெனக் கூறுகின்றனர் மேலோர்.

---

## ருது தோஷப் பரிகாரம்

### சித்திரைமாத தோஷப் பரிகாரம்

சித்திரையில் ருதுவான தோஷத்திற்குச்
செய்யவே பரிகார முறையே சொல்வோம்
பத்தினிக்கும் புருடனுக்கும் புதியவாடை
பாங்காக வுடுத்தியே அமரவைத்து
எத்திக்கும் துவாரங்கள் செய்ததாக
எரிந்தமண் கலயமிருவர் சிரத்திட்டு
சுத்தஜலம் வார்த்தபின்னர்ச் சூறையிட்டுச்
சுமங்கலிக்கு ஆடைதனைத் தானஞ் செய்யே

(இ-ள்.) சித்திரைமாதம் புருடனுக் காகாதென்பதற்குப் பரிகாரமாவது என்னவென்றால், புருஷனுக்கும் பெண்ஜாதிக்கும் வஸ்திர முடுத்தி அவர்கள் சிரசில் ஜல ஸ்நானஞ் செய்வித்துப் பின்பு வேறு மாங்கல்ய ஸ்திரீக்கு அப் புடவையைத் தானஞ் செய்யவும். இதுவே சிறந்த சாந்தியாம்.

## ஆடிமாத தோஷப் பரிகாரம்

ஆடியிலே வடிவுகண்ட பெண்தானந்தோ
அனைவரையு மிச்சிப்பா ளென்பதற்குத்
தேடிய பற்பலநற் கனிகளெல்லாஞ்
சீர்தட்டு தனில்வைத்துப் பூவுஞ் சேர்த்துக்
கோடியென்ற சேலை கட்டி அமரவைத்துக்
குமரிக்குக் காட்டியதைத் திருஷ்டி சுற்றி
ஆடுகின்ற பிள்ளைகளாம் பலருக்கீந்தால்
ஆடிமாத தோஷமது வகன்றுபோமே.

(இ-ள்.) ஆடி மாதம் பல புருஷரை இச்சிப்பாளென்பதற்குச் சாந்தி என்னவென்றால், பலவிதமான கனிகளைக் கொண்டுவந்து தாம்பாளத்தில் வைத்துப் புட்பஞ் சாத்திப் பெண்ணுக்குக் கோடியாடை யுடுத்தி அந்தக் கனியைத் திருஷ்டி சுற்றித் தானஞ் செய்யவேண்டியது.

## ஐப்பசி மாத தோஷத்திற்குப் பரிகாரம்

அற்பிசியில் ருதுவான தோஷத்திற்கு
அடைவாக சாந்தியது வரையக் கேண்மோ
கற்புடைய சுமங்கிலியைக் கண்டழைத்துக்
கருத்தாக அப்பியங்கஞ் செய்துவைத்து
பொற்றாலி சிவப்பாடை மஞ்சட்குங்குமம்
பூவுடனே தாம்பூல மிவைகளெல்லாம்
நற்கொடைபோற் றானமது செய்வாராகில்
நாடாது வைப்பசியின் தோஷந்தானே.

(இ-ள்.) ஐப்பசி மாதம் புஷ்பவதியாகில் விதவையாவாளென்பதற்குப் பரிகார மென்ன வென்றால், ஒரு

மங்கலிய ஸ்திரீக்கு அப்பியங்க ஸ்நானஞ் செய்வித்து ஒரு சிகப்புப் புடவை மங்கிலியம் மஞ்சள் குங்குமம் தாம்பூலம் தட்சணை இவைகளைத் தானஞ் செய்யவேண்டும்.

## கார்த்திகை மாத தோஷ சாந்தி

கார்த்திகை மாத தோஷங் கழிக்கவே சாந்தி சொல்வோம்
சீர்த்திமிகு சிவாலயத்தில் சிறந்தபசு நெய்தேர்ந்து
வார்த்துநற் றீபம்வைத்தால் வஞ்சிக்கோர் தோஷமின்றும்
பார்த்திபரின் மிக்கவுயர் சித்தர்கள் பகர்ந்ததாமே.

(இ-ள்.) கார்த்திகை மாதம் பலரையும் தூஷிப்பாளென்பதற்குப் பரிகாரம்:—சிவாலயங்களில் பசுவின் நெய்யால் விளக்கேற்றி வைக்கவும். கார்த்திகைமாதத் தோஷம் நிவர்த்தி யாகும்.

## வார தோஷ பரிகார சாந்தி

ஞாயிற்றுக்கிழமை ருதுவானவள் வியாதியாயிருப்பாளென்பதற்குப் பரிகாரமாகக் கோதுமை தானங் கொடுக்கவும்.

செவ்வாய்க்கிழமை ருதுவானவள் இடுக்கணுண்டாயிருப்பாளென்பதற்குப் பரிகாரம்: ஒரு வீடு போல் ஒரு பந்தல் போடுவித்து அப்பந்தலில் ருதுவான பெண்ணைப் படுக்க வைத்து ஷை பந்தல் வாசற்படியை அடைத்து ஒரு பக்கங் கொஞ்சங் கொளுத்தி ஷை பெண்ணை வேறொரு வழியாக வெளியில் வரவழைத்து ஸ்நானஞ் செய்வித்து மறுபடியும் ஒரு மங்கிலிய ஸ்திரீயை அப்பியங்க ஸ்நானஞ் செய்வித்து அவளுக்கு ஒரு மங்கிலியம் ஒரு சிகப்புச்சேலை குங்குமம் மஞ்சள் தாம்பூலம் தட்சணையோடு தானங்கள் கொடுக்க நீங்கும்.

சனிக்கிழமை ருதுவான பெண் விபத்தை யடைவாளென்பதற்குப் பரிகாரம்: ஒரு வெண்கலப் பாத்திரத்தில் நல்லெண்ணெய் வார்த்து அதில் ருதுவான பெண்ணைத் தன் ரூபத்தைப் பார்க்கச் செய்து மறுபடியும் வேறொரு கலசத்தில் பால் விட்டுத் தானங் கொடுக்கச் சனிக்கிழமை தோஷம் நீங்கும்.

## திதி தோஷ பரிகார சாந்தி

பிரதமையில் ருதுவானால் சோரத்துவ முண்டாயிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: சிவாலயங்களில் அபிஷேகம் நைவேத்தியஞ் செய்வித்து எள் தானங் கொடுக்க நீங்கும்.

சதுர்த்தி சத்துருவுடைய ளென்பதற்குப் பரிகாரம்: சிவாலயங்களுக்கு அகண்டங்களில் தாமரைநூல் போட்டுப் பசுவின் நெய் விட்டுத் திருவிளக்கேற்ற நீங்கும்.

அஷ்டமி பெற்றிழப்பவளென்பதற்குப் பரிகாரம்: சிறு பிள்ளைக்குப் பானகங் கொடுக்கத் தோஷம் நீங்கும்.

நவமி கிலேச முடையவளா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: கொஞ்சம் பொன்னினால் பசுவைப்போல் செய்து ஒரு பெரியவருக்குத் தானங்கொடுக்கத் தோஷம் நீங்கும்.

ஏகாதசி துக்கமுடையவ ளென்பதற்குப் பரிகாரம்: சிவாலயங்களில் நெய்விளக் கேற்றிவைத்து ருத்திரனுக்கு அபிஷேகஞ் செய்யத் தோஷம் நீங்கும்.

சதுர்த்தசியில் சோரம் பாபஞ் செய்பவ ளென்பதற்குப் பரிகாரம்: அரசமரத்தை நாளொன்றுக்கு 8-தரம் பிரதட்சணமாக 3-நாள் செய்து மூன்று பேர்களுக்கு அன்னதானங் கொடுக்கத் தோஷம் நீங்கும்.

பௌர்ணமி விடமுடையவளென்பவற்குப் பரிகாரம்: தட்சணை தாம்பூலத்தோடு ஒரு கலியாணப் பூசனைக்காய் தானங் கொடுக்கத் தோஷம் நீங்கும்.

அமாவாசை தரித்திரமா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: ஒரு வெண்கலப் பாத்திரத்தில் நல்லெண்ணெய் வார்த்து அதில் ருதுவான பெண்ணைத் தன் ரூபத்தைப் பார்வையிடச் செய்து அதைத் தானங் கொடுக்க நீங்கும்.

## நக்ஷத்திர தோஷப் பரிகாரம்

அசுவனியில் ருதுவானால் மலடியா யிருப்பாளென்பதற்குப் பரிகாரம்: வன்னி சமுத்து ஓமம் வளர்த்தி அதற்கு 200 பிரதட்சணஞ் செய்யத் தோஷம் நீங்கும்.

கிருத்திகையில் ருதுவானால் மலடியா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: சிவசுப்பிரமணியருடைய ஆலயங்களில் 27-மாவிளக்கில் பசு நெய் விட்டு விளக்கேற்றி அவைகளுக்கு 27-பிரதட்சணஞ் செய்து உபவாச மிருந்து 27-பேர்களுக்கு அன்னம் படைக்கத் தோஷம் நீங்கும்.

திருவாதிரையில் ருதுவானால் புருஷனிடம் வெறுப்புடையவளா யிருப்பாளெனபதற்குப் பரிகாரம்: பெண்ஜாதி பிள்ளையுடைய ஒரு பெரியவரை அப்பியங்க ஸ்நானஞ் செய்வித்து வஸ்திரம் சந்தனம் குங்குமம் மஞ்சள் புஷ்பம் அட்சதை தாம்பூலம் தட்சணை கொடுத்துப் பிரதட்சணம் செய்து அனுப்பிவிடத் தோஷம் நீங்கும்.

ஆயிலியம் வயிறழிவு என்பதற்குப் பரிகாரம்: கந்த மூலாதிகளைச் சிறு பிள்ளைகளுக்குத் தானங் கொடுக்கவும். மேலும் சிவாலயங்களுக்குத் தீபாராதனை செய்விக்கவும். தோஷம் நீங்கும்.

மகம் புத்திரநாச மடைவா ளென்பதற்குப் பரிகாரம்: கிராம தேவதைகளுக்குப் பொங்கல் வைத்து மாவிளக்கிடத் தோஷம் நீங்கும்.

பூரம் மலடியா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: தங்கள் குல தெய்வத்திற்கும் பூவாடைக் காரிக்கும் பூசை நைவேத்தியஞ் செய்விக்கத் தோஷம் நீங்கும்.

அனுஷம் ரோகி யென்பதற்குப் பரிகாரம்: தர்ப்பையால் ஒரு பிரதமை செய்து தகித்து அச்சாம்பலை நித்தியம் ஒரு வேளை நெற்றியிலிட்டு 108-வில்வ பத்திரம் 108-வெண்தாமரைப் புஷ்பம் சிவாலயங்களில் அர்ச்சனை செய்து நவக்கிரகப் பூசை சாந்தி செய்து அன்னதானம் பண்ணத் தோஷம் நீங்கும்.

விசாகம் அமங்கலையாயிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: ஜல்லிபோல் செய்த கரகத்தில் ஜலம்விட்டுப் புருஷனும் பெண்சாதியும் குந்தவைத்துச் சிரசின்மேல் ஜலத்தை யொழுகவிட்டு அவர்கள் கட்டியிருந்த ஆடைகளைத் தானம் பண்ணத் தோஷம் நீங்கும்.

கேட்டை பரஸ்திரீயா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: ஒரு அரசமரத்தை 108-பிரதட்சணம் வந்து ஓமம் வளர்த்தித் தங்கள் குலதெய்வத்திற்குப் பூசை செய்யவும்.

சதயம் பொருளழிவு என்பதற்குப் பரிகாரம், தாமரை நூல் திரித்துப்போட்டு நெய்விட்டுச் சிவாலயங்களில் எண்ணிறந்த விளக்குகள் வைத்து அபிஷேகம் நைவேதனம் அர்ச்சனை செய்வித்துக் கலியாணப் பூசனைக்காயுள் பிரதமையோடு சொருகித் தானங்கொடுக்கத் தோஷம் நீங்கும்.

பூரட்டாதி மலடியாயிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: பானகம் தாம்பூலம் தானஞ்செய்யத் தோஷம் நீங்கும்.

ரேவதி ரோகி என்பதற்குப் பரிகாரம்: சிவாலயங்களிலாவது விஷ்ணுவாலாயங்களிலாவது 108-செந்தாமரை 108-வெண் தாமரை இவைகளை மந்திரவிதியுடனே அபிஷேகம் நைவேத்தியம் அர்ச்சனை செய்வித்து நெல்லிமரத்தின் கீழ்ச் சமாராதனை செய்விக்கத் தோஷம் நீங்கும்.

## யோக தோஷ பரிகாரம்

விஷகம்பம் வினையுண்டா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: சந்தனம் புஷ்பம் பெரியோர்களுக்குக் கொடுக்கத் தோஷந் தீரும்.

அதிகண்டம் பாவியா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: மாங்கலிய ஸ்திரீகளுக்குக் கதம்பப் பொடி மஞ்சள் குங்குமம் காதோலை கரிமணி சுயம்பாகம் தாம்பூலம் கொடுக்கத் தோஷந் தீரும்.

சூலம் துர்மரண மாவாளென்பதற்குப் பரிகாரம், சிவாலயங்களுக்குக் கற்பூர தீபாராதனை செய்ய நீங்கும்.

கண்டம் பாவியாயிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: ஒரு மாங்கலிய ஸ்திரீக்கு அவளுடைய புருஷனுக்கும் புஷ்பம் சந்தனம் கதம்பப் பொடி மஞ்சள் குங்குமம் காதோலை மங்கிலியம் சேலை சோமன் சுயம்பாகம் தாம்பூலம் தட்சணை தானங்கொடுக்க தோஷம் நீங்கும்.

வியாபாதம் விதவையாவா ளென்பதற்குப் பரிகாரம்: வெண்கலப் பாத்திரந் தானங் கொடுக்கத் தோஷம் நீங்கும்.

வியதீபாதம் கொடிய விசனமாயிருப்பா ளென்பதற்கு ஒரு மாங்கலிய ஸ்திரீக்கு மஞ்சள் சந்தனம் புட்பம் சுயம் பாகம் தானங்கொடுக்கத் தோஷம் நீங்கும்.

பரீகம் ஊருக்குப் பகையா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: ஆலயத்தைப் பிரதட்சணஞ் செய்து ஈஸ்வரிக்கு அபிஷேகஞ் செய்யத் தோஷம் நீங்கும்.

பிராயம் பாவியா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: பலவித பழங்கள் கொண்டுவந்து தானங் கொடுக்கத் தோஷம் நீங்கும்.

வைதிருதி உயிர்வதை செய்வா ளென்பதற்குப் பரிகாரம்: சிவாலயங்களுக்கு அபிஷேகம் நைவேதனஞ் செய்ய நீங்கும்.

## கரண தோஷ பரிகாரம்

கரம் விதவையாவா ளென்பதற்குப் பரிகாரம்: மாங்கலியப் பெண்களுக்குப் புட்பம் சந்தனம் தாம்பூலம் அன்னங் கொடுக்கத் தோஷம் நீங்கும்.

சகுனி நடவாத நடத்தை நடப்பா ளென்பற்குச் சாந்தி: ஓமம் வளர்த்தி அதை 27-பிரதட்சணம் செய்து வந்து. தானங் கொடுக்கத் தோஷம் நீங்கும்.

சதுஷ்பாதம் சந்தோஷ மில்லாதவ ளென்பதற்குப் பரிகாரம்: அன்னதானங் கொடுக்கத் தோஷம் நீங்கும்.

## லக்கின தோஷ பரிகாரம்

மேஷம் பரஸ்திரீயா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: வீட்டு தேவதைகளுக்கு வெண்டாமரைப்பூ தரிக்க வேண்டியது.

ரிஷபம் விபசாரியா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: கன்னி கழியாப் பெண்களுக்குப் பழவர்க்கங்கள் கொடுக்கத் தோஷ மகலும்.

மிதுனம் விபசாரியா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்: சிவாலயங்களுக்குத் தாமரை நூலினால் வர்த்தி

யிட்டு 108-விளக்கு வைத்து நாகப் பிரதிட்டை செய்து அதைப் பிரதட்சணஞ் செய்யத் தோஷ மகலும்.

விருச்சிகம் பரஸ்திரீயா யிருப்பா ளென்பதற்குப் பரி காரம்:—சிவாலயங்களுக்குத் தாமரை நூல் போட்டுப் பசு வின் நெய் விட்டு 100-விளக்கேற்றி நாகப் பிரதிட்டை செய்து, அரசமரத்தை 100-பிரதட்சணம் வந்து அன்ன தானங் கொடுக்க நீங்கும்.

தனுசு விபசாரிய யிருப்பா ளென்பதற்குப் பரிகா ரம்: தனுசு நாழிகை 5. அது முற்பாதியானால் தர்ப்பாச னம் போட்டு 9 நாள் ; படுத்திருந்து 10 வது நாளில் சில ருக்கு அன்னங் கொடுக்கத் தோஷம் நீங்கும்.

மீனம் தீதுடையவளா யிருப்பாளென்பதற்குப் பரி காரம்:—ஒரு சிவாலயத்திற்கு நெய்விளக்கேற்றி அபிஷேக நைவேத்தியஞ் செய்யத் தோஷம் நீங்கும்.

## ஏழாமிடத் தோஷப் பரிகாரம்

7-ஆமிடத்தில் சூரிய னிருந்தால் விதவை யாவாளென் பதற்குப் பரிகாரம்:—ஒரு மாங்கலிய ஸ்திரீக்கு மங்கிலிய மும், தாம்பூலமும் தானங் கொடுக்கத் தோஷ மகலும்.

7-ஆ மிடத்தில் சந்திரன் இருந்தால் குழந்தைகளை யிழப்பா ளென்பதற்குப் பரிகாரம்:—சிறு பிள்ளைகளுக்குப் பாலுஞ் சோறும் பழமும் அளிக்கத் தோஷ மகலும்.

7-ஆ மிடத்தில் செவ்வாய் நின்றால் வேசை யாவா ளென்பதற்குப் பரிகாரம்: சங்கிரம சாதிக்குச் சிவப்பு அன் னம் சிவப்புப் பதார்த்தம் சிவப்புப் புஷ்பம் தானங்கொடுக் கத் தோஷம் நீங்கும்.

7-ஆ மிடத்தில் புதன நிற்கில் மலடியாவா ளென்பதற் குப் பரிகாரம்:—சிவாலயத்திற்கு உச்சித்தொட்டில் பிள்ளை செலுத்தி ஜெபஞ் செய்யத் தோஷ மகலும்.

7-ஆ மிடத்தில் குரு நிற்கில் பாக்கிய மில்லாதவளா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்:—செவ்வந்திப் புஷ்பத் தைப் பத்திமாலை கட்டி ஒரு தேவதைக்குத் தரிக்க வேண் டியது. தோஷ மகலும்.

7-ஆ மிடத்தில் சுக்கிரன் நிற்கில் வீடுவிட்டுப் போவா ளென்பதற்குப் பரிகாரம்:—ஓமசாந்தி செய்யவும்.

7-ஆமிடத்தில் சனி நிற்கில் வியாதியா யிருப்பாளென் பதற்குப்பரிகாரம்:—சிவாலயங்களுக்கு அபிஷேகஞ் செய் வித்துக் குருவுக்குச் சமானமாக விருக்கின்ற ஒரு பெரிய வருக்கு அன்னங் கொடுக்க தோஷம் நீங்கும்.

7-ஆமிடத்தில் இராகு நிற்கில் உறவுக்குப் பகையா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்:—கிரகசாந்தி செய்ய தோஷ மகலும்.

7-ஆமிடத்தில் கேது நிற்க உறவுக்குப் பகையாயிருப் பாளென்பதற்குப் பரிகாரம்:—நவதான்ய தானம் கொடுக்க தோஷ மகலும்.

## காலதோஷம் 6-க்கும் பரிகாரம்

குடை தானம் கொடுக்க வேண்டியது. சிவாலயத்தில் திருவிளக் கேற்றிவைத்து அவைகளைப் பிரதட்சணம் செய்ய வேண்டியது. தோஷ மகலும்.

## ஜாமத்தின் தோஷ பரிகாரம்

3-வது ஜாமம் சாய்ந்த முலையுண் டென்பதற்குப் பரி காரம்:—பச்சைப் பாக்குக் கொலைகள் தக்கபெரியோர் களுக்குத் தானங் கொடுக்க தோஷ மகலும்.

4-வது ஜாமம் சரிந்த ஸ்தனமுடையவளா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்:—இளநீர்க் காய் குலைகள் தக்க பெரியோர்களுக்குத் தானங் கொடுக்க தோஷ மகலும்.

## ஜாமதோஷப் பரிகாரம்

4-வது ஜாமம் பலரையும் வேண்டுவா ளென்பதற்குப் பரிகாரம்:—விசிறி பானகம் பாக்கு வெற்றிலை தானங் கொடுக்க தோஷ மகலும்.

## வஸ்திரதோஷப் பரிகாரம்

பச்சை சேலையானல் தரித்திர மென்பதற்குப் பரி காரம்:—ஷை சேலையை யாருக்காவது கொடுத்துவிடவும்.

3

சிவப்புச் சேலையானால் வியாதியா யிருப்பா ளென்பதற்குப் பரிகாரம்:—கலவைச் சந்தனத்தால் ஆலயங்களுக்கு அபிஷேகஞ் செய்ய தோஷ மகலும்.

கறுப்புச் சேலையானால் விபசாரியாவா ளென்பதற்குப் பரிகாரம்:—ருதுவான பெண் வேறொரு கருப்புச் சேலை யுடுத்திக்கொண்டு அவள் புருடனுடன் ஒரு புண்ணிய நதியில் ஸ்னானஞ்செய்து அச் சேலையை ஒரு மங்கிலிய ஸ்திரீக்குத் தானங்கொடுக்க தோஷ மகலும்.

பஞ்சவர்ண சேலையானால் தரித்திரி யென்பதற்குப் பரிகாரம்:—சிவாலயங்களுக்குச் சோடச உபசாரங்களோடு மகாபிஷேகமும் நைவேதனமும் செய்வித்து அந்தச் சேலையை யாருக்காவது தானங்கொடுக்க தோஷ மகலும்.

## புத்திராள் தொகை தோஷப் பரிகாரம்

இரட்டை யானால் ரோகமுண்டு என்பதற்குப் பரிகாரம்:—கோரோஜனை கலந்த சந்தனம் தானங்கொடுக்க தோஷ மகலும்.

## வேறுவித ஆரூட பலன்

சூரியன் நின்ற நக்ஷத்திரத்துடன் ருதுவான நக்ஷத்திரம் வரைக்கும் எண்ணி அதை அஷ்ட நக்ஷத்திரமாக 66-இடத்திற்குப் பங்கிடுவதில் ருதுவான நக்ஷத்திரம் எந்தத் திக்கில் மாறுகிறதோ அந்தத் திக்கின் பலாபலன் அறியவும்.

கிழக்கில் 3-வரில் தனவதியா யிருப்பாள்.
தென்கிழக்கில் 1-ல் இல்லறம் வழுவாள்
தெற்கில் 3-ல் புருஷனைப் பிரிந்துபோவாள்
தென்மேற்கில் 3-ல் புத்திரவர்த்தனி யாவாள்
மேற்கில் 3-ல் அயல்வீடு போவாள்
வடமேற்கில் 3-ல் விதவையாவாள்
வடக்கில் 3-ல் தனசம்பத் துண்டாம்
பிரமஸ்தானம் இழிவானகுலம் சேர்வாள்.

## விவாகப் பொருததம

### நாம நக்ஷத்திரங்களின்

### கண மிருக விருக்ஷ பக்ஷி முதலியன

| நாம வெழுத்துக்கள் | | | | நக்ஷத் | கணம் | மிருகம் | விருட் | பக்ஷி |
|---|---|---|---|---|---|---|---|---|
| சு | செ | சொ | ல | அசுவ | தேவ | ஆண்குதி | எட்டி | ராஜா |
| லி | லூ | லே | லோ | பரணி | மனுட | ஆண் | நெல் | காக் |
| ஆ | இ | உ | எ | கிருத்தி | ராக்ஷ | பெ-ஆடு | அத்தி | மயில் |
| ஒ | வ | வி | வு | ரோகி | மனுட | ஆ-பாம் | நாவல் | ஆந் |
| வெ | வோ | க | கி | மிருகசீ | தேவ | பெ-பாம் | கருங் | கோழி |
| கு | க | ங | ச்ச | திருவா | மனு | ஆ-நாய் | செங்கா | அன்றி |
| கெ | கோ | ஹ | ஹி | புனர்பூ | தேவ | பெ-பூனை | மூங்கில் | அன் |
| ஹீ | ஹே | ஹோ | ட | பூசம் | தேவ | ஆ௵டு | அரசு | நீர்கா |
| டி | டு | டே | டோ | ஆயிலி | ராக்ஷ | ஆ-பூனை | புன்னை | சிச்சி |
| ம | மி | மு | மெ | மகம் | ராக்ஷ | ஆ-எலி | ஆல் | ஆகழு |
| மொ | டா | டி | டு | பூரம் | மனுட | பெ-எலி | பலாசு | பெகழு |
| டெ | டோ | ப | பி | உத்தர | மனுட | ஆ-எரு | அலரி | சில்வ |
| பூ | ஷ | ண | ட்ட | அஸ்த | தேவ | பெ-எரு | ஆத்தி | பருந் |
| பெ | போ | ரா | ரி | சித்தி | ராக்ஷ | ஆ-புலி | வில்வ | மரங் |
| ரு | ரே | ரோ | த | சுவாதி | தேவ | ஆ-எரு | மருது | தேனீ |
| தி | து | தே | தோ | விசாக | ராக்ஷ | பெ-எலி | விளா | செவ் |
| ந | நி | நு | நெ | அனுட | தேவ | பெ-மான் | மகிழ் | சாதக |
| நொ | ய | யி | யு | கேட் | ராக்ஷ | ஆ-மான் | பிராய் | சக்கர |
| யெ | யோ | பா | பி | மூலம் | ராக்ஷ | பெ-நாய் | மரா | செம் |
| பு | த | ப | ட | பூராட | மனுட | ஆ-குர | வஞ்சி | பகண |
| பெ | போ | ஜ | ஜி | உத்தி | மனுட | மலடுபசு | பலா | வலிய |
| ஜூ | ஜெ | ஜோ | க | சிரவண | தேவ | பெ-குர | எருக் | நாரை |
| க | கி | கு | கே | அவிட் | ராக்ஷ | பெ-சிங் | வன்னி | பொன் |
| கொ | ஸ | ஸி | ஸூ | சதயம் | ராக்ஷ | பெ-குதி | கடம்பு | ஆ-கா |
| ஸ | ஸோ | சா | தி | பூரட் | மனுட | ஆ-சிங் | தேமா | உள்ள |
| து | ஸ்ரீ | ஞ | த | உத்தி | மனுட | பசு | வேம்பு | கோட் |
| தெ | தோ | ச | சி | ரேவதி | தேவ | பெ-யா | இலுப் | வல்லூ |

## சந்திரன் நக்ஷத்திரங்களில் நிற்கும் இராசிகள்

| | |
|---|---|
| அசுவனியும், பரணியும், கிருத்திகை முதற்காலும் | மேஷம் |
| கிருத்திகைப் பின்முக்காலும் ரோகிணியும் மிருகசீரிடத்து முன்னரையும் | இடபம் |
| மிருகசீரிடத்துப் பின்னரையும் திருவாதிரையும் புனர்பூச முன் முக்காலும் | மிதுனம் |
| புனர்பூசத்து நாலாங்காலும் பூசமும் ஆயிலியமும் | கடகம் |
| மகமும் பூரமும் உத்தரத்து முதற்காலும் | சிங்கம் |
| உத்தரத்துப் பின் முக்காலும் அத்தமும் சித்திரை முன்னரையும் | கன்னி |
| சித்திரைபிற் பின்னரையும் சுவாதியும் விசாகத்து முன் முக்காலும் | துலாம் |
| விசாகத்து நாலாங்காலும் அனுஷம் கேட்டையும் | விருச்சிகம் |
| மூலமும் பூராடமும் உத்திராடத்து முதற்காலும் | தனுசு |
| உத்தராடத்துப் பின் முக்காலும் திருவோணமும் அவிட்டத்து முன்னரையும் | மகரம் |
| அவிட்டத்துப் பின்னரையும் சதயமும் பூரட்டாதி முன் முக்காலும் | கும்பம் |
| பூரட்டாதியின் நாலாங்காலும் உத்தரட்டாதியும் ரேவதியும் | மீனம் |

## கோசாரப் பலன்

### சூரியன்

1-வியாதி, 2-வியாகூலம், 3-நன்மை, 4-சத்துரு பயம், 5-ரோகம், 6-திரவிய லாபம், 7-ஸ்தான சலனம், 8-சரீரபீடை, 9-பயம், 10-தனலாபம், 11-நன்மை விருத்தி, 12-தனவிரயம்.

### சந்திரன்

1-தேக சௌக்கியம், 2-தனஹானி, 3-திரவிய லாபம், 4-ரோக பயம். 5-காரிய விகற்பம், 6-சந்தோஷம் 7-சௌக்கிய விருத்தி, 8-ரோக விருத்தி, 9-காரியதாமதம், 10-கிலேப்பேறு, 11-இஷ்டார்த்த சித்தி, 12-தனவிரயம்.

### சேவ்வாய்

1-புத்தி குறைவு, 2 வியாதி, சத்துரு, 3 திரவிய லாபம், 4 விரோதம், சுரம், 5 பல சேதம், 6 லக்ஷ்மீகரம், 7 சிறைப்பயம் கலகம், 8 மரண பயம், கஷ்டம், 9-காரிய நஷ்டம், 10-பயம், செலவு, 11-திரவிய லாபம், 11-பிணி சத்துரு செலவு.

### புதன்

1-பிராணபயம், 2-நற்குணம், 3-புத்தி குறைவு, 4-புத்திரவிருத்தி, 5-அபகீர்த்தி, 6-திரவிய லாபம், 7-சோகம், 8-அநுகூலம், 9-மறதி, 10-லக்ஷ்மீகரம், 11-சந்தோஷம், 12-பல நஷ்டம்.

### குரு

1-பிராணபயம், பொருட்சேதம், 2-பொருள் வரவு, 3-வியாதி நஷ்டம், 4-சிநேக விரோதம். 5-திரவிய லாபம், 6-துயரம், 7-ஸ்திரீ சங்கமம், சுகம், 8-மரண வியாகூலம், 9-வஸ்திரம், சம்பத்து, 10-இடம் பெயர்ச்சி, பிரயாணம், 11-பொன் வஸ்திரம், 12-திரவிய நாசம், வியாதி.

### சுக்கிரன்

1-பொருட்பேறு, 2-லக்ஷ்மிகரம், 3-சௌக்கியம், 4-பந்து கூட்டம், 5-திரவிய லாபம், 6-நிலைப் பிரிவு, 7-வியாதி, 8-பிரியம், 9-திரவியம், தருமம், 10-பொருட்சேதம், கலகம், 11-சுகபோஜனம், 12-சுபம்.

### சனி-ராகு-கேது

1-புத்தி குறைவு, 2-வியாதி சத்துரு 3-திரவிய லாபம், 4-விரோதம், சுரம், 5-பல சேதம், 6-லக்ஷ்மிகரம், 7-சிறைப் பயம், கலகம், 8 மரண பயம், கஷ்டம், 9-காரிய நஷ்டம், 10-பயம், பலச் செலவு, 11-திரவிய லாபம், 12-பிணி சத்துரு செலவு.

### கிரக நோக்கு

சூரியன் 7-ஆமிடம் பார்வை, சந்திரன் 7-ஆமிடம், குஜன் 4-7-8-ஆமிடம், புதன் 7-ஆமிடம், குரு 5-7-9-ஆ

மிடம், சுக்கிரன் 7-ஆமிடம், சனி 3-7-10-ஆ மிடம், இராகு கேது இவர்களுக்கு 3-7-10-ஆ மிடம். இவ்விதம் பார்வையைக் கண்டுகொள்ளவும்.

## மாத பலாபலன்

ஜன்ம நக்ஷத்திர முதல் மாதம் பிறந்த நக்ஷத்திரம் வரையில் எண்ணிக் கண்ட தொகையை 7-ல் பெருக்கி 8-ல் கழித்த சேடம் 1-ல் ரோகம் 2-ல் இலாபம், 3-ல் அலைச்சல் செலவு, 4-ல் பந்தனம், 5-ல் போஜன சௌக்கியம், தனம், 6-ல் ஐஸ்வரியம், 7-ல் பொருள் செலவு, 8-ல் மிக்க கஷ்டம், அவகேடு என்றறிக.

## தின பலாபலன்

ஜன்ம நட்சத்திரமுதல் அன்றைய நட்சத்திரம் வரையில் எண்ணிக் கண்ட தொகையுடன் ஞாயிறு முதல் அன்றைய வாரம் வரையில் எண்ணிக் கண்ட தொகையுடன் பிரதமை முதல் அன்றைய திதி வரையிலுங் கூட்டிக் கண்ட தொகையைச் சோத்து 9-ல் கழித்த மிச்சம் 1-ல் வியாகூலம், 2-ல் சுபம், 3-ல் துர்வார்த்தை, 4-ல் பந்து தரிசனம், 5-ல் பெண்போகம், 6-ல் சுபம், 7-ல் கலகம், 8-ல் ரோகம், 9-ல் ஞான சிலாக்கியம் எனவறிக.

## சந்திர பலன்

ஜனன ராசிமுதல் அன்றையதினஞ் சந்திரனிருக்கின்ற ராசி வரைக்கும் எண்ணின தொகையில் 1-ல் தேக சௌக்கியம், 2-ல் தன ஆனி, 3-ல் திரவிய லாபம், 4-ல் ரோகபயம், 5-ல் காரிய விக்கினம், 6-ல் சத்துரு நாசம், 7-ல் சௌக்கிய விருத்தி, 8-ல் ரோக விருத்தி, 9-ல் காரிய தாமசம், 10-ல் உத்தியோக விருத்தி, 11-ல் இஷடார்த்த சித்தி, 12-ல் தன விரையம். சுக்கில பட்சத்தில் 2-5-9 உத்தம மென்றும், கிருஷ்ணபட்சத்தில் 4-8-12 உத்தம மென்றுங் கூறுவாறு முளர்.

## தாரா பலன்

ஜன்ம நக்ஷத்திரமுதல் தற்கால நக்ஷத்திரம் வரையில் எண்ணிவந்த தொகையை ஒன்பதில் வகுத்த மிச்சம்

1-ஆனால் ஜன்மம் கிலேச முண்டாகும், 2-ஆனால் சம்பத்துண்டாகும், 3-ஆனால் விபத்து ஆபத்துண்டாகும், 4-ஆனால் க்ஷேமம் சுக முண்டாகும், 5-ஆனால் பிரத்தியக்கு காரிய நாசமுண்டாகும், 6-ஆனால் சாதனம் தெய்வானுகூலமுண்டாகும், 7-ஆனால் நைதனம் துக்கமுண்டாகும் 8-ஆனால் மைத்ரம் சுபங்களுண்டாகும், 9-ஆனால் பரம மைத்திரம் அதிக சுபமுண்டாகும். இந்த வொன்பது மூன்றும் பரியாயத்தில் (அதாவது) 27-ம் நட்சத்திரம் அசுபம்.

---

## விவாகப் பொருத்தங்கள்

### நக்ஷத்திரப் பொருத்தம்

ஸ்திரீயினுடைய ஜன்ம நட்சத்திர முதல் புருஷனுடைய நட்சத்திரம் வரையில் எண்ணிக் கண்ட தொகை 2 4 6 8 9 11 12 15 16 24 26 ஆனால் உத்தமம். 12-ம் நாளின் முதற்காலும் 11-ம் நாளின் நாலாங்காலும் 16-ம் நாளின் மூன்றாங்காலும் கழித்து மற்றுள்ள கால்கள் புருஷ நாளாக வரின் மத்திபம். இதிற் சொல்லப்படாத நாட்களும் அஷ்டமராசி நாட்களும் அதம மெனப்படும்.

### ஏக தினப் பொருத்தம்

ரோகிணி, திருவாதிரை, பூசம், மகம், அஸ்தம், திருவோணம், உத்திரட்டாதி, ரேவதி இவை 8-ம் ஸ்திரீயும் புருஷனும் ஒரு நாளாகில் மத்திம மெனப்படும்.

இதில் ஸ்திரீ புருஷர்கள் நாள் ஒன்றாகி இரண்டு ராசிக்கும் பங்குபட்ட நாளாகில் முதலிராசி நாள் புருஷனும் இரண்டாம் இராசிநாள் பெண்ணுமாகில் பொருந்தும். இது மாறி வரினும் இதில் சொல்லப்படாத நாட்களும் ஒரு நாளாகிற் பொருந்தாவாம்.

### கணப் பொருத்தம்

அசுவனி, மிருகசீரிடம், புநர்ப்பூசம், அத்தம், சுவாதி, அனுஷம், திருவோணம், ரேவதி, ஆகிய இவ்

வொன்பதும் தேவ கணம். பரணி, ரோகிணி, திருவாதிரை, பூரம், உத்திரம், பூராடம் உத்திராடம், பூரட்டாதி, உத்திரட்டாதி ஆகிய இவ்வொன்பதும் மனுஷ கணம். கார்த்திகை, ஆயிலியம், மகம், சித்திரை, விசாகம், கேட்டை, மூலம், அவிட்டம், சதயம் ஆகிய இவ்வொன்பதும் இராக்ஷச கணம்.

பெண்ணினுடைய நக்ஷத்திரமும் புருஷனுடைய நக்ஷத்திரமும் ஒரே கணமானால் உத்தமமெனப்படும்.

பெண் தேவகணமும் புருஷன்மனுஷகணமும் அல்லது இராக்ஷச கணமுமானாலும் மத்திம மெனப்படும்.

பெண் இராக்ஷசகணமும் புருஷன் தேவகணமு மானாலும், பெண் மனுஷகணமும் புருடன் இராக்ஷசகணமு மானாலும் அதம மெனப்படும்.

பெண் இராக்ஷசகணமும் புருஷன் மனுஷகணமு மானால் அதமா அதமம்.

பெண்ணினுடைய நக்ஷத்திரத்திற்கு 24-ன் மேற் புருஷ நக்ஷத்திரம் வரினும், இருவருக்கு மதிபதிகள் நட்பாட்சியாயிருக்கினும் பெண்ராக்ஷசகணமா யிருந்தாலும் பொருந்தும்.

## மாகேந்திரப் பொருத்தம்

பெண் நக்ஷத்திரம் முதல் புருஷ நக்ஷத்திரம் 7 10 13 16 22 25-ஆம் நாட்களாக வரின் விவாகம் செய்யலாம்.

## ஸ்திரீ தீர்க்கப் பொருத்தம்

பெண் நக்ஷத்திரமுதல் புருஷ நக்ஷத்திரம் 13-க்கு மேற்பட்டால் விவாகஞ் செய்யலாம்.

பெண்ணுக்கும் புருஷனுக்கும் ஒரு பிராணி நக்ஷத்திரமானால் உத்தம மெனப்படும். அதில் ஆண் ஆணாகவும் பெண் பெண்ணாகவு மிருந்தால் அதிக உத்தமம். இதர பிராணி நக்ஷத்திரமாகிலும் வைரசாதி யாகாமற்போனால் விவாகஞ் செய்துகொள்ளலாமெனக் கூறுகின்றனர்.



## இராசிப் பொருத்தம்

பெண்ணும் புருஷனும் ஒரு இராசியாயினும், பெண் ராசிக்குப் புருஷன் ராசி 6-க்கு மேற்படினும் உத்தமம்.

பெண் ராசிக்குப் புருஷன் ராசி 3-4, ம் இராசியாகில் மத்திம மெனப்படும். 2,5,6-ம் இராசியாகில் அதமம்.

## இராசி யதிபதி பொருத்தம்

| விவரம் | சூரியன் | சந்திரன் | செவ்வாய் | புதன் | குரு | சுக்கிரன் | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| சூரியனுக்கு | உத்தமம | உத்தமம் | உத்தமம் | மத்திபம் | உத்தமம் | தீது | தீது |
| சந்திரனுக்கு | ஷை | ஷை | மத்திபம் | உத்தமம் | மத்திபம் | மத்திபம் | மத்திபம் |
| செவ்வாய்க்கு | ஷை | ஷை | உத்தமம் | தீது | உத்தமம் | ஷை | ஷை |
| புதனுக்கு | ஷை | தீது | மத்திபம் | உத்தமம் | மத்திபம் | உத்தமம் | ஷை |
| குருவுக்கு | ஷை | உத்தமம் | உததமம் | தீது | உத்தமம் | தீது | ஷை |
| சுக்கிரனுக்கு | தீது | தீது | மத்திபம் | உத்தமம் | மத்திபம் | உத்தமம் | உத்தமம் |
| சனிக்கு | ஷை | ஷை | தீது | ஷை | ஷை | ஷை | ஷை |

ஸ்திரீ ராசி அதிபதியும் புருஷ ராசி அதிபதியும் மித்துருவானால் பொருந்தும்; சத்துருவானால் பொருந்தாது.

## வசியப் பொருத்தம்

மேஷத்திற்குச் சிங்கமும் விருச்சிகமும், இடபத்திற்குக் கடகமும் துலாமும், மிதுனத்திற்குக் கன்னியும், கடகத்திற்கு விருச்சிகமும் தனுசும், சிங்கத்திற்குத் துலாமும், கன்னிக்கு மிதுனமும் மீனமும், துலாத்திற்கு மகரமும், விருச்சிகத்திற்குக் கடகமும் கன்னியும், தனுசுக்கு மீனமும், மகரத்திற்கு மேடமும் கும்பமும், கும்பத்திற்கு மேடமும், மீனத்திற்கு மகரமும் வசியமாம். இப்படிப் பார்த்து ஸ்திரீயினுடைய ராசிக்கு வசியமான ராசி புருஷ ராசியாகில் உத்தமம். புருஷனுடைய ராசிக்கு வசியமான ராசி ஸ்திரீ ராசியாயின் மத்திமம். இருவருடைய ராசியும் இவ்வாறு வராதிருந்தால் வசியம் பொருத்தமெனப்படும்.

## விருக்ஷப் பொருத்தம்

புருஷ நக்ஷத்திரம் வைர மரமும் பெண்ணிற்குப் பால் மரமுமாகில் பிள்ளைப்பே றுண்டாம். பெண் வைரமரமும் புருஷன் பால் மரமுமாகில் மலடாவர். இருவரும் வைர மரமாகில் பிள்ளைச் சேதமும் பொருள் சேதமு முண்டாம். இருவர் நட்சத்திரமும் பால் மரமாகில் அதிக பிள்ளைகளும் பாக்கியங்களு முண்டா மெனப்படும்.

## ஆயுட் பொருத்தம்

பெண்ணினுடைய நக்ஷத்திர முதல் புருஷனுடைய நக்ஷத்திரம் வரையும் எண்ணின தொகையும் புருஷனுடைய நக்ஷத்திரமுதல் பெண்ணினுடைய நக்ஷத்திரம் வரையும் எண்ணின தொகையும் தனித்தனியே ஏழிற் பெருக்கி 27-க்கீந்த சேஷம் பெண்ணினுடைய நக்ஷத்திரத் தொகை குறையில் ஆயுட் பொருத்தம் பொருந்தும். புருஷனுடைய நக்ஷத்திரத் தொகை குறையில் பொருந்தாது எனப்படும்.

## பஞ்சபக்ஷிப் பொருத்தம்

மயிலுக்கும் கோழிக்கும் வல்லூறும் ஆந்தையும், காகத்திற்கு ஆந்தையும், வல்லூறுக்கு ஆந்தையும் மயிலும்

கோழியும் பகை. இதில் சொல்லப்படாதவை யெல்லா முறவு. பெண்ணுக்கும் புருஷனுக்கும் ஒரே பட்சியானு லும் பகை யில்லாதிருந்தாலும் பட்சி பொருந்தும். பகை யானுல் பொருந்தாதெனப்படும்.

## பஞ்சபூதப் பொருத்தம்

அசுவனி முதல் 5-நாள் பிருதிவி, திருவாதிரைமுதல் 9-நாள் அப்பு, உத்திரமுதல் 6-நாள் தேயு, கேட்டை முதல் 5-நாள் வாயு, அவிட்ட முதல் 5-நாள் ஆகாயமாம். ஸ்திரீ யும் புருஷனும் ஒரே பூதமாயின் உத்தமம், அப்புவும் தேயு மாகில் அதமம், மற்ற பூதங்களாயின் மத்திபமெனப்படும்.

## வேதைப் பொருத்தம்

அசுவனிக்குக் கேட்டையும், பரணிக்குச் சுவாதி யும், திருவாதிரைக்குத் திருவோணமும், புனர்பூசத்திற்கு உத்திராடமும், பூசத்திற்குப் பூராடமும், ஆயில்யத்திற்கு மூலமும், மகத்திற்கு ரேவதியும், பூரத்திற்கு உத்திரட்டா தியும், உத்தரத்திற்குப் பூரட்டாதியும், அத்தத்திற்குச் சதயமும் ஆகிய இந்நாட்கள் ஒன்றினுக்கொன்று வேதை யாம். மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம் ஆகிய இம்மூன்று நாளும் ஒன்றினுக்கொன்று வேதையாம். ஸ்திரீ புருஷர் களுடைய நக்ஷத்திரங்கள் இந்நாட்களாயின் வேதை பொருந்ாது. மாறிவரிற் பொருந்தும்.

## வேதைக்கயிறு இரச்சுப் பொருத்தம்

மிருகசீரிடம், சித்திரை, அவிட்டம் இந்த மூன்றும் சிரோரச்சு. ரோகிணி, திருவாதிரை, அஸ்தம், சுவாதி, திருவோணம், சதயம் இந்த ஆறும் கண்டரச்சு. கார்த் திகை, புனர்பூசம், உத்திரம், விசாகம், உத்திராடம், பூரட் டாதி இந்த ஆறும் உதர ரச்சு. பரணி, பூசம், பூரம், அனுஷம், பூராடம், உத்திரட்டாதி இந்த ஆறும் தொடை ரச்சு. அசுவனி, ஆயிலியம். மகம், கேட்டை, மூலம்,

ரேவதி இந்த ஆறும் பாதரச்சு. வதூவரர்களுடைய நக்ஷத்திரங்கள் ஒரு ரச்சுவி லிருந்தால் பொருந்தாவாம்.

---

## இரச்சுக் கயிறு

| மிருகசீரிடம் | | சித்திரை | | அவிட்டம் | |
|---|---|---|---|---|---|
| ரோகிணி | திரு | அஸ் | சுவா-சிரவ | | சதயம் |
| கார்த்தி | புன | உத் | விசா-உத்ரா | | பூரட்டாதி |
| பரணி | பூச | பூர | அனு-பூரா | | உத்திரட்டாதி |
| அசுவனி | ஆயி | மக | கேட்-மூல | | ரேவதி |

## கோத்திரப் பொருத்தம்

அசுவனி முதல் 4-ம் மரீசியும், மிருகசீரிட முதல் 4-ம் அத்திரியும், ஆயிலிய முதல் 4-ம் வசிஷ்டரும், அஸ்த முதல் 4-ம் அங்கீராவும், அனுஷ முதல் 4-ம் புலத்தியரும், உத்திராட முதல் 3-ம் புலகரும், சதய முதல் 4-ம் கிருதுமாம். ஸ்திரீ புருஷர்கள் ஒரு கோத்திர நட்சத்திரங்களாகில் கோத்திரம் பொருந்தாது. மாறிவரிற் பொருந்தும்.

## வருணப் பொருத்தம்

கடகம், விருச்சிகம், மீனம் பிராமண வருணம். சிங்கம், தனுசு க்ஷத்திரிய வருணம். இடபம், கன்னி, மகரம் வைசிய

வருணம். மிதுனம், துலாம், கும்பம் சூத்திர வருணம். ஸ்திரீ ராசி தாழ்ந்த வருணமும் புருஷ ராசி உயர்ந்த வருண மூமாயினும், இரண்டில் ஒரு வருணமாயினும் வருணம் பொருந்தும், மாறி வரின் பொருந்தாதெனப்படும்.

## நாடிப் பொருத்தம்

அசுவனி, திருவாதிரை, புனர்ப்பூசம், உத்திரம், அஸ்தம், கேட்டை, மூலம், சதயம், பூரட்டாதி இந்த 9-நக்ஷத்திரங்களும் இடைநாடி. பரணி, மிருகசீரிடம், பூசம், பூரம், சித்திரை, அனுஷம், பூராடம், அவிட்டம், உத்திரட்டாதி இந்த 9-நக்ஷத்திரங்களும் சுழிமுனை நாடி. கார்த்திகை, ரோகிணி, ஆயிலியம், மகம், சுவாதி, விசாகம், உத்திராடம், திருவோணம், ரேவதி இந்த 9-நக்ஷத்திரங்களும் பிங்கலை நாடி. ஸ்திரி நக்ஷத்திரமும் புருஷ நக்ஷத்திரமும் ஒரு நாடியாயிருந்தால் விவாகஞ் செய்யக்கூடாது. மாறியிருந்தால் உத்தமமெனப்படும்.

## பொருத்த விதி

பிராமணருக்கு அதிபதி பொருத்தமும், க்ஷத்திரியருக்குக் கணப் பொருத்தமும், வைசியருக்கு ஸ்திரி தீர்க்கப் பொருத்தமும், சூத்திரர் சங்க்ரம ஜாதி முதலானவர்களுக்கு யோனிப் பொருத்தமும் பிரதானமாக விருத்தல் வேண்டுமெனக் கொள்க.

## விவாகத்திற்குக் குரு பலன்

வியாழன் புருஷனுக்கு 3-6-லும், ஸ்திரீகளுக்கு 1-8-12-லும் இருக்குங் காலங்களில் விவாகம் செய்யலாகாது. இருவருக்கும் 4-10-ல் இருக்குங் காலமும் மத்திபம். மற்றவை உத்தமமெனப்படும்.

## விவாகத்திற்கு

ஆடி புரட்டாசி மார்கழி மாசி மாதங்கள் தவிர மற்ற மாதங்களில் சுபவாரங்களில் உவா இருத்தை அஷ்டமி நீங்

கிய திதிகளில் ரோகிணி, மிருகசீரிடம், மகம், உத்திரம், அஸ்தம், சோதி, அனுஷம், மூலம், உத்திராடம், உத்திரட்டாதி, ரேவதி இந்த நக்ஷத்திரங்களில், விருஷபம் மிதுனம் கடகம், சிங்கம், கன்னி, துலாம், தனுசு, மகரம், கும்பம், மீனம் இந்த ராசிகளில் 3-6-11-ல் பாபர்களும் புதன் குரு சுக்கிரன் 6-8-அல்லாத இடங்களிலும் 7-மிடம் சுத்தமாயின் உத்தமமெனப்படும்.

### திருமங்கிலியத்திற்குப் பொன்னுருக்குதல்

திங்கள், புதன், வியாழன், வெள்ளி வாரோதயங்களும்; பிரதமை, சதுர்த்தி, அஷ்டமி, நவமி, பூரணை, அமாவாசியை ஒழிந்த திதிகளும்; அசுவனி, ரோகிணி, மிருகசீரிடம், புனர்பூசம், மகம், உத்திரம், சித்திரை, அஸ்தம், சுவாதி, அனுஷம், திருவோணம், அவிட்டம், சதையம், ரேவதி நக்ஷத்திரங்களும்; இடபம், மிதுனம், கர்க்கடகம், கன்னி, துலாம், தனுசு, மீனம் இந்த ராசிகளும் 7-மிடம் சுத்தமுமாக ஸ்திரீ புருஷர்களுக்கு அனுகூலமான நக்ஷத்திரங்களிலே திருமங்கலியத்திற்குப் பொன்னுருக்க உத்தம மெனப்படும்.

### கூறை கொள்ளுதல்

ஸ்திரீ புருஷர்களுக்கு அனுகூலமான சுப தினத்திலே பஞ்சாங்க யோகம் நன்றாக பகற்காலத்திலே 6-7-மிடம் சுத்தம் பெறக் கூறைப்புடவை கொள்ள உத்தமம்.

### முகூர்த்தக் கால் நடுதல்

விவாக தினத்திற்குள்ளே 9 7 5 3 ஆகிய ஒற்றை நாட்களிலே ஸ்திரீ புருஷர்களுக்கு அனுகூலமான நக்ஷத்திரங்களில் சுபவாரோதய வம்சத்தில் பஞ்சாங்கயோகம் நன்றாக அக்கினியோகம் அக்கினி பஞ்சகம் ஊஷ்ணசிகை தவிர்ந்து அஷ்டமசுத்தி பெற மணக்கால் நடவும், அங்கு ரார்ப்பணஞ் செய்யவும் உத்தமம்.

## விவாக சோபனத்திற்குச் சொல்லுதல்

திருமங்கலியத்திற்குப் பொன்னுருக்கக் குறித்த சுப தினங்களிலே ஸ்திரீ புருஷர்களுக்கு அனுகூலமான தினத்தில் சுமங்கலமான பெரியமனிதர்களுக்குச் சந்தனம் அட்சதை தாம்பூலங் கொடுத்துச் சோபன முகூர்த்தஞ் சொல்லுதல் உத்தமம்.

---

## பஞ்சக விபரம்

ஞாயிறு முதல் அன்றைய வாரம் வரையும் பிரதமை முதல் அப்பொழுதுள்ள திதி வரையும் அசுவனி முதல் தற்கால நக்ஷத்திரம் வரையும் மேஷ முதல் இஷ்டகால லக்கினம் வரையும் அமைந்த தொகைகளை இஷ்டகால லக்கினம் மேஷ சிங்கமாகில் 9-ம், விருஷப கடகமாகில் 5-ம், மிதுனமாகில் 6-ம், கன்னி மீனமாகில் 3-ம், துலாம் கும்பமாகில் 2-ம், விருச்சிகம் மகரமாகில் 1-ம் ஆகிய துருவங்களைக் கூட்டி 9-ஆல் வகுத்த சேஷங் கொண்டு பஞ்சகங் கொள்ளலா மென்பாருமுளர். தனுசு லக்கினத்துக்குத் துருவமில்லை யென்க. ஒன்றாய்க் கூட்டி 9-இனால் வகுத்த சேஷம்,

| | | | | |
|---|---|---|---|---|
| 1-ஆயின் | மிருத்யு | பஞ்சகம். | இரத்தின தானம் பிரீதி |
| 2- | ,, | அக்கினி | ,, | சந்தனக்குழம்பு தானம் |
| 4- | ,, | இராஜா | ,, | எலுமிச்சம்பழம் தானம் |
| 6- | ,, | சோர | ,, | தீபதானம் |
| 8- | ,, | ரோக | ,, | தானிய தானம் |

### வார பஞ்சக தோஷம்

ஞாயிறில் ரோக பஞ்சகமும், திங்களில் இராஜ பஞ்சகமும், செவ்வாயில் அக்கினி பஞ்சகமும், புதன் சனியில் மிருத்யு பஞ்சகமும், வியாழன் வெள்ளியில் சோர பஞ்சகமும் வரில் தோஷமாம்.

## கால பஞ்சக தோஷம்

பகற்காலத்தில் அக்கினி இராஜ பஞ்சகமும், இராத்திரியில் சோரரோக பஞ்சகமும், அர்த்த ராத்திரியில் மிருத்யு பஞ்சகமும் வரில் தோஷமாம்.

விவாகத்தில் மிருத்து பஞ்சகமும்
உபநயனத்தில் சோர பஞ்சகமும்
கிருகாரம்பத்தில் அக்னி பஞ்சகமும்
யாத்திரையில் சோர பஞ்சகமும்
கிருஷியாரம்பத்தில் இராஜ பஞ்சகமும்

வரில் தோஷமாம். மற்றவை நன்மையாம்.

## பெண்கள் ருது ஜனன ஜாதகம்

சம்பூர்ணம்



The Progressive Printers, Madras.



உலக ரகசியம் என்னும்

# பிரபஞ்ச உற்பத்தி ரூப

**பண்டிதர்களும் பத்திராதிபர்களும் புகழும் அரிய பெரிய நூல்**

1. உலக காண்டம்
2. தேவ காண்டம்
3. மக்கள் காண்டம்
4. சமய காண்டம்

இதில் பூமி முதல் பதினான்கு லோகங்களின் அமைப்புக்கள், அந்தந்த லோகங்களில் வாழும் ஜீவர்களின் தன்மைகள், நமது பூலோகத்தில் பலவித கண்டங்களின் பிரிவுகள், அந்தந்த கண்டங்களில் வாழும் ஆண் பெண்களின் குணகுண இரகசியங்கள், ஆண் பெண் ஒருவரை யொருவர் காதல் அடைதலும் கருத்தொருமித்தலும் ஆகிய இயற்கையின் ரகசியங்கள், கடிமணம் புரிந்து குறைவற்ற இன்பமடைவற்குறிய ஒழுக்க ரகசியங்கள், பெண்ணுக்கேற்ற ஆணும் ஆணுக்கேற்ற பெண்ணும் ஆராருய்ந்தறியும் நுட்பங்கள், பெண்கள் ஆடவர்களின் சுப லட்சணங்கள், ருதுசாந்தி முகூர்த்தத்தின் தத்துவம், விவாக விதி, விவாகப் பொருத்தங்கள், விவாக ஒழுங்குகளின் கருத்துக்கள், புணர்ச்சி விதி ஆகிய உண்மை ரகசியங்கள், பிறப்பு முதல் இறப்பு வரையும் அடைதற்கான இன்ப முறைகளும் இல்லற ஒழுக்கநெறிகளும் நன்மை தீமை விதி விலக்குக்கள் ஆராய்ந்தறிதலும்ஆகிய இரகசியங்கள், ஆயுளை நீடிக்கச் செய்யும் பிராணயாம முதலிய யோக முறைகள், பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய திருமூர்த்திகள் முதல் சிறுதேவதைகள் வரை எல்லா தெய்வங்களினுடைய மதத்துவேஷமற்ற உண்மை வரலாறுகள், சிவ பெருமான் சக்தி விஷ்ணு முதலியவர்களின் அநந்த லீலா வைபவங்களையும் தசாவதாரத் தத்துவங்களையும், எல்லாக் கடவுளர்களுடைய படை கொடி விருது தேர் வாகனம் முதலிய சின்னங்களையும் பற்றிய உண்மைகள், வழிபடு முறைகள், இந்தியா, சீனா, ஜப்பான், ஜர்மனி, ருஷியா, ஐரோப்பா முதலிய எல்லாத்தேச மக்களினுடைய மதபேதங்கள் அவரவர் வணங்கும் தெய்வம் வழிபாடுகள் முதலிய இரகசியங்கள், சைவம், வைஷ்ணவம் இவற்றின் உட்பிரிவுகளும் அவற்றின் கொள்கைகளாதிய உண்மைகள் ஆகிய எண்ணற்ற விஷயங்கள் அடங்கியிருக்கின்றன.

மிகவும் சிறந்த நூல் கிளேஸ் பதிப்பு. தபாற் கூலி அணா 8



## _டு வித்தைகள் 4 பாகம் ரூ. 2

ான், ஜெர்மனி, சைனு, ப்ரான்ஸ் முதலிய பல தேச வித்தைகள் 2,000 அடங்கி யிருக்கின்றன.

தில் வரிசை விழுங்குதல், மாம்பழ ஜாலம், சமுத்திர லம், சங்கிலி ஜாலம், அக்கினி ஜாலம், வாத்திய ஜாலம், லுமிச்சை வித்தை, செப்பிடு வித்தை, பிசாசு ஜாலம், ரூபாயை அழைக்கும் வித்தை, வாயில் நூலிழுக்கும் வித்தை, சைனு தேச வித்தைகள், தேவாலயம் கட்டும் வித்தை, பல வாத்யங்கள் கேட்கும் வித்தை, தீபத்தைத் தலை கீழாகக் காட்டுதல், கண்ணில் நூலிழுக்கும் வித்தை, அந்தரத்தில் குத்தும் வித்தை, அந்தரத்தில் நிற்கும் வித்தை, முட்டை விளையாடுகிற வித்தை, கோழித்தலை கூவும் வித்தை, மோகினி வித்தைகள், இம்மாதிரியான பல ஜாலங்க ளடங்கி யிருக்கின்றன.

## விஷவைத்திய சிந்தாமணி அணு 12

இந்நூலில் எத்தகைய கொடிய விஷஜந்துக்களின் கடிகளுக்கும் தகுதியான கைகண்ட முறைகள் விளக்கமாக எழுதப் பட்டிருக்கின்றன. இவ்வரிய புத்தகம் ஒன்றிருக்குமானுல் பாம்பு முதலிய விஷ ஜந்துக்களைப் பற்றிய பயமே இல்லாமல் போகும். அஷ்ட நாகங்கள் வசிக்குமிடம், பரிமளக்குறி, படத்தின்குறி, ஆடுங்குறி, விஷத்தின் அளவு, சாத்தியாசாத்தியம் முதலியனவும் எலி, பெருச்சாளி, பல்லி, அரணை, பணை நாய், வண்டு முதலியவற்றின் விஷத்துக்கு அவுடதம், கலிக்கம், மூலிகைப் பிரயோகம், புகை, முடிக்கயிறு, மந்திரம் முதலிய சிகிச்சைகளும் அடங்கியது.

## சகுன சாஸ்திரம் அணு 4

எல்லாச் சுபாசுப காரியங்களுக்கும், முகூர்த்தங்களுக்கும் பலாபலன்களும் தெரிந்துகொள்ளலாம். பொதுப்பிரயாணம், திக்குப் பிரயாணம், யாத்திரை, தேசாந்திரம் முதலிய சகல பிரயாணங்களும், சுபாசுப விரதங்களும், பட்சிகளின் தொனிப்பலனும், அகால பிரயாணங்களுக்குச் சாந்திகளும் அடங்கியது.

## மாதர் பூஷணம் (அகட விகட சம்சாரி) அ. 6

பெண்களுக்கு நல்லொழுக்க நீதிகளை இனிமையாகப் போதிப்பது. தீயொழுக்கங்களால் நேரும் கஷ்டங்களும் அவமானங்களும் நல்லொழுக்கங்களினுல் நேரும் நன்மையும் சிறப்பும் தெளிய விளக்குவது.

---

தென்னிந்திய புத்தகசாலை,
2/17, பவழக்காரத் தெரு, சென்னை.